

# அம்ருதா

Amrudha Tamil Monthly

Volume 18 Issue 12 July 2024 Rs.30
ஆண்டு 18 இதழ் 12 ஜூலை 2024 ரூ.30

ஷங்கர்ராமசுப்ரமணியன்
அரவிந்தன்
மாலதி மைத்ரி
சஃபி
சுவாமிநாதன்
கௌதம் ராஜ்
தாமரைபாரதி
வேலு இராஜகோபால்
இந்திராகாந்தி அலங்காரம்
பாவண்ணன்
சௌவி
ச. சுரேஷ்
இந்திரா பார்த்தசாரதி
செவல்குளம் செல்வராசு
கயல்

## வரலாற்றுக்கென்று தனித்த வாசகர் வட்டம் இல்லை

ஆ.இரா. வேங்கடாசலபதி நேர்காணல்

ஆண்டு 18 இதழ் 12



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஜூலை-2024 விலை ரூ. 30

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: சந்ரு
மனநலம்: டாக்டர் மா. திருநாவுக்கரசு
வரலாறு: பொ. வேல்சாமி
மொழிபெயர்ப்பு: நாகரத்தினம் கிருஷ்ணா
திரைப்படம்: விட்டல்ராவ்
கல்வி: பேரா. தியாகராஜன்
அறிவியல்: பத்ரி சேஷாத்ரி
இலக்கியம்: தேவேந்திரபூபதி
நாடகம்: அ. ராமசாமி
ஊடகம்: இளைய அப்துல்லாஹ்
சூழலியல்: மோகன்ராம்
இசை: ரவிசுப்பிரமணியன்
விளையாட்டு: ஆர். அபிலாஷ்
தற்கால நிகழ்வுகள்: செ. சண்முகசுந்தரம்
அரசியல்: மருதன்

வடிவமைப்பு: பிரபாகரன்

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்...

# படைப்பாளியை கொச்சைப்படுத்தாதீர்கள்!

**புதியமாதவியின் 'இராசேந்திர சோழன் கதைகளில் காமப் பெண்ணுடல்கள்' கட்டுரைக்கான எதிர்வினைகள்...**

**நாஞ்சில் நாடன்:** கூர்மையான அவதானிப்பு, அருமை.

**க.பஞ்சாங்கம்:** நீங்கள் எழுதியிருக்கும் விமர்சனம் ஒரு வகையில் சரியானதாகப் படலாம். ஆனால், இன்னும் கொஞ்சம் ஆழமாகவும் நுட்பமாகவும் பார்த்து விமர்சிக்கப்பட வேண்டிய படைப்பாளுமை ராஜேந்திரசோழன். ஆண் பெண் பாலியல் செயல்பாட்டில் ஆண்களின் இயலாமை போதாமை களைத் தமிழில் இவரைப் போலப் பதிவு செய்தவர்கள் குறைவு. அவருடைய எளிய மொழியினாலான எடுத்துரைப்பு, அதற்குள் இருக்கும் ஆழத்தை உணர விடாமல் செய்துவிடக் கூடிய ஓர் ஆபத்து இருப்பதை என் வாசிப்பில் உணர்ந்திருக்கிறேன்.

**சித்ரா பாலசுப்பிரமணியன்:** முக்கியமான கட்டுரை

**கருப்பு பிரதிகள் நீலகண்டன்:** தேசியவாத உணர்வுக்குள் சிக்குண்ட மார்க்சியர்களிடம் பெண்ணுடல், பெண்ணிருப்பு என்பவைகளை தனித்துவத்தோடு அணுகுவதில் போதாமைகள் இருந்துள்ளன. அதே போன்று ஒடுக்கப்பட்ட தலித் இருப்பும் கூட அவர் கதைகளில் சிக்கல்களாகவே இருந்துள்ளது. 2000களில் 'குருவி வர்க்கம்' என்றொரு கதையை 'புதிய கோடங்கி'யில் எழுதினார் அதற்கு எதிர்வினை எழுதியதற்காக பிறகு நேரில் பார்க்கும்போது என்னிடம் பேசுவதையே தவிர்த்தார்.

**சு. வாசன், திருநெல்வேலி:** கட்டுரை முழுதும் படித்துவிட்டு மனம் நிலையில்லாமல் தவித்தது. மவுனம் சூழ்ந்தது. துணிச்சலான எழுத்து. தசை பசி எவ்வாறு ஆட்டுவிக்கிறது என்பதை அலசி ஆராய்ந்திருக்கிறீர்கள்.

இயற்கை படைத்த இன்பப் பொருள் பெண்ணுடல் என்பதே பெரும்பாலானவர்களின் கருத்தாக இருக்கிறது. காம உணர்வு ஆண்களுக்குத்தானே அதிகமிருக்கும், பெண்களுக்கு காம உணர்வை அடக்கிக் கொள்ளும் திறனுண்டல்லவா!

'நான் உட்பட எல்லா ஆண்களுமே பெண்ணுடல்களுக்கு அலைபவர்கள்தான்; சந்தர்பம் கிடைக்காததால் தான் பலர் ராமனாக இருக்கிறார்கள்' என கண்ணதாசன் எழுதுவார். கேரள முதல்வர் ஒருவர் பெண் தசை வாணிபம் ஆதிகால வியாபாரம் என்றார். அலுவலக வீட்டு வேலை முடித்து தளர்ந்து படுக்கையில் விழும் போது கணவனின் கைகள் பெண்ணுடலை தழுவ துடிக்கிறது என்று பெண் எழுத்தாளர்களின் கதைகள் தொடரும். இதற்கு முடிவு?

"இவர்களுக்கு காமமும் தெரியவில்லை, உடலுறவு தரும் கிளர்ச்சியும் புரிவதில்லை" என்று கட்டுரையை முடித்திருப்பது மனதை என்னவோ செய்தது.

**மணிமாறன்:** உடல் அரசியலை மற்றொரு கோணத்தில் பேசுகிற கட்டுரை. கட்டுரையின் இடையீடாக இராசேந்திர சோழனின் கதைகளை நுண் வாசிப்பாக்கி இருக்கிறீர்கள். அவருடைய எட்டுக் கதைகளை மறுபடியும் ஒருமுறை படித்து இந்தக் கட்டுரை முன்வைக்கும் கருத்துக்களை சரிபார்க்க வேண்டும் என்று படுகிறது.

சரோஜினி கனகசபை: கட்டுரையை வாசித்து விட்டு அவருடைய சில சிறுகதைகளை வாசித்தேன். சில கதைகளில் வரும் பெண் பாத்திரங்கள் ஒருவகை பாலியல் மீறலை நிகழ்த்துபவர்களாகவே இருக்கிறார்கள். ஆனால், அவர்கள் குடும்ப அமைப்புக்குள் இருந்துகொண்டே இதனைச் செய்கிறார்கள். ஒரு சில கதைகளில் சிறுவர்களின் மனவுலகத்தை மையமாகக் கொண்டு வளர்பருவத்தில் அவர்கள் எதிர்கொள்ள நேர்கின்ற துயரங்கள், அழுத்தங்கள், மகிழ்ச்சியின்மை, நிராசைகளாகக் கழியும் ஆசைகள் போன்றவைகளையும் பதிவு செய்து இருக்கிறார். ராஜேந்திரசோழன் நூல்கள் இதற்கு முன் வாசித்ததில்லை.

**பாரதி:** பெண்ணுடல் குறித்து இம்மாதிரியான ஆண் மையப் புள்ளியில் எழுதிய இராசேந்திரசோழனும் அவர் கதைகளும்

## இராசேந்திர சோழன் கதைகளில் காமப் பெண்ணுடல்கள்

**புதியமாதவி**

அதிர்ச்சி தரும் பாலியல் மீறல்களை கதைக் கருவாக கொண்டிருக்கும் இராசேந்திர சோழன் கதைகளின் பெண் பாத்திரப் படைப்புகள், அவர் பெண்களைப் புரிந்துகொள்ளவில்லை என்பதை மட்டுமல்ல, காமத்தையும் புரிந்துகொள்ளவில்லை என்பதையே வெளிப்படுத்துகிறது!

இராசேந்திரன் சோழன் சிறுகதைகள் பெண்ணின் காமத்தைப் பேசுவதில் போட்டிப் போடுகின்றன. அதில் இடம்பெறும் பெண்கள் அனைவருக்கும் காமம் தீர்க்க முடியாத பசியாக அவர்கள் உடலை அலைக்கழிக்கிறது. அவர்கள் எப்படியும் பசி தீர்க்கும் வேட்கை கொண்ட இரவு மிருகங்களாகிவிடுகிறார்கள். அவர்களின் உடல் எப்போதும் பசித்திருக்கிறது. அவர்களுக்கு சதா தன் பசி தீர்க்கும் வெறி மட்டுமே வாழ்க்கையில் பிராதானமாக இருப்பதாக தெரிகிறது. பசித்தால் என்ன கிடைத்தாலும் சாப்பிட்டுவிடும் உடல்களாக அவர்களின் உடல்கள் சித்தரிக்கப்படுகின்றன.

புதுமைப்பித்தனின் 'பொன்னகரம்' போலத்தான் இராசேந்திர சோழனும் எழுத ஆரம்பிக்கிறார். அந்த ஆரம்பம் 'காணிக்கை' கதையில் ஆரம்பித்த வேகத்திலேயே முடிந்தும் விடுகிறது. புதுமைப்பித்தனின் அம்மாளுவும் சந்துக்கு பக்கத்தில் ஆணோடு இருளில் மறைந்து முக்கால் ரூபாய் சம்பாதித்துவிட்டாள்; 'ஆம் புருஷனுக்கு பால்கஞ்சி வார்க்கத்தான்' என்பார் புதுமைப்பித்தன். 'கற்பு கற்பு என்று கதைக்கிறீர்களே, இதுதான் ஐயா பொன்னகரம்' என்று கதையில் புதுமைப்பித்தனே வந்து நிற்பார்.

புதுமைப்பித்தனுக்குள் இருந்த அறச்சீற்றம் கதையில் வெளிப்படையாக தெரியவரும். இராசேந்திர சோழனின் 'காணிக்கை' கதையிலும் இதே பிரச்சனையின் இன்னொரு வடிவம். அங்கே கணவன், இங்கே மகன். ஜுர வேகத்தில் குளிரில் நடுங்கும் மகன் உடல். ராசாத்தி தன் மகனை மெத்தையில் கிடத்தி கதகதப்பான துணியால் போர்த்திவிட்டு, அந்த டெய்லருடன், 'வெறும்தரையில் மல்லாக்க கிடந்தாள் மரக்கட்ட மாதிரி' என்று கதையை முடித்து இருப்பார் இராசேந்திர சோழன்.

இக்கதையில் அப்பெண்ணின் செயலுக்கான ஒரு காரணம் சொல்லப்பட்டிருக்கும். சமூகவியல் நோக்கில் இக்கதை நகர்ந்திருக்கிறது. பெண்ணின் பொருளாதர இயலாமை 'பொன்னகரம்' கதைக்குள்ள அதே பின்னணியைக் கொண்டிருக்கும். ராசாத்தி 'மரக்கட்ட மாதிரி கிடந்தாள்' என்று முடிக்கும்போது அவள் உடலும் உடலோடு பொருந்தாத அவள் மனமும் இரண்டும் வேறு வேறாக துண்டாகிக் கிடக்கும். இக்கதை அப்பட்டமான பொன்னகரத்தின் இன்னொரு பிரதியாகவே இருக்கிறது. ஒருவகையில் இக்கதை வழக்கமான இராசேந்திரசோழனின் பெண் கதையாக இல்லை. அவருடைய பிற பெண்கதைகளிலிருந்து இக்கதை மாறுபட்டுள்ளது.

இராசேந்திர சோழனின் கதைகளில் இடம்பெறும் பெண்கள் உழைக்கும் சம்சாரி குடும்பத்தின் பெண்களாக இருக்கிறார்கள். அக்குடும்பத்தின் ஆண்கள் உழைப்பே கதி என்று இருப்பதால் அப்பெண்களின் உணர்வுகளைப் புரிந்துகொள்ளாதவர்களாக இருப்பதாக சூசகமாக கதையின் ஆண் கதைப் பாத்திரங்களின் சித்தரிப்பு வழியாக முன்வைக்கிறார்.

'வன்மம்' கதையில் இடம்பெறும் வீராசாமியின் மனைவி செல்லக்கண்ணு, 'நாய்வேஷம்' கதையில் இடம்பெறும் இருசப்பன் மனைவி, 'புற்றிலுரையும் பாம்புகள்' கதையில் வரும் அவள் கணவன், 'இசைவு' கதையில் இடம்பெறும் நடேசனின் மாமியார்... இவர்கள் அனைவருக்கும் இருக்கும் ஒரே தலையாய பிரச்சனை அவர்களின் உடலிச்சையைத் தீர்க்கமுடியாத அவர்களின் கணவன்மார்கள். எனவே, இப்பெண்கள் அனைவரும் தங்கள் காமப்பசிக்காக அலைகிறார்கள். எது கிடைக்கிறதோ அதை நக்கிப் பிழைக்கும் தெரு நாய்களாக அலைகிறது அவர்களின் காமம்.

காமப்பேய்ப் பிடித்த பெண்ணுடல் என்பது, அவர் கதைகளின் பெண்கள் அனுபவிக்கும் அவஷ்தையாக மட்டுமல்லாமல், அதை எதிர்கொள்ள முடியாமல் வன்முறையில் தள்ளப்படும் ஆண் சமூகத்தின் அவலத்தையும், அவர் கதைகள் சித்தரிக்கின்றன.

'வன்மம்' சிறுகதையில் அவர் படைத்திருக்கும் வீராசாமியின் வன்மத்திற்கு காரணமே அவர் மனைவி செல்லக்கண்ணுதான். செல்லக்கண்ணுவை அறிமுகப்படுத்தும்போது அவள்தான் அந்த ஊரில், 'ப்ராய்சரி போட்டுக்கொண்டு வந்த முதல்பெண்' என்பார். அவளுடைய அந்த உள்ளாடையை (பிரா BRA), அவள் தன்னுடலை பகிரங்கமாக வெளிப்படுத்தும் அவள் அடையாளமாக பார்ப்பது அந்த ஊர் ஆண்கள் மட்டுமல்ல, கதையை எழுதுகிற ஆண் மனமும்தான்.

இக்கதையில் செல்லக்கண்ணுவின் கணவன் வீராசாமி எப்போதும், தன் வேலையில் உரையாடல் நடத்துவதோ அவள் பேச்சுக்கு 'உம்' சொல்வதற்கோ அப்பால் மேற்கொண்டு நீட்டித்து செல்லவே அறியாதவனாக காட்டுகிறார் ஆசிரியர். இதனால்தான் செல்லக்கண்ணு சிரித்து சிரித்து பேசும் ஆண்களுடன் பழகுகிறாள். கணவன் சந்தேகப்படும்போது, "நீ என்னய்யா, நீ... ஊருல இருக்கிற கழுதங்க ஒண்ணொன்னு பேசிக்கிதுன்னா... அதுக்காக பயந்துக்னு கெடக்கச் சொல்றீயா. நம்ம மனசு சுத்தமாயிருந்தா சரிதான்" என்று கணவனுக்கு நம்பிக்கை ஊட்டுகிறாள் செல்லக்கண்ணு.

மீண்டும் ஊர்ப் பஞ்சாயத்து கூடி வழக்குப் பேசும்போதும், "எனக்கு ஏன் இந்த தண்டனை எல்லாம், அவரைப் பிரிஞ்சி என்னாலே தனிச்சு வாழ முடியுமா? குடும்ப பெண்ணுக்கு இதெல்லாம் அடுக்குமா?" என்று பேசத் தெரிந்தவள்.

செல்லக்கண்ணு என்ற பெண், குடும்பம், அதில் கணவன் - மனைவி இருவரின் பங்களிப்பு, இடம் எல்லாமும் அறிந்தவளாகவே பேசுகிறாள். இவ்வளவும் பேசிய செல்லக்கண்ணுதான் கதை முடிவில் தன் சொல்லுக்கும் செயலுக்கும் சம்பந்தமே இல்லாதது போல நடந்துக்கொள்கிறாள். அவள் ஊர்ப்பஞ்சாயத்தில் கண்ணீருடன் கதறியதையும் அவள் சொன்னதையும் நம்புகிற வீராசாமி, தன் கண்ணால், மனைவி செல்லக்கண்ணு சோப்பு கம்பேனி ஏஜண்டுடன் உடலுறவு கொண்ட நிலையில் இருப்பதை பார்க்கும்போது, வீராசாமியின் நிலையை கதையாசிரியர் விவரித்து இருப்பார்.

> அவன் இதுவரை எதை நம்பாமல் அசட்டை செய்து வந்தானோ அதையே நேரில் பார்த்துவிட்ட பிறகு... இரத்தம் கொதித்தது; அவமானம் பிடுங்கி தின்றது, ஆண்மை மேலெழுந்து நின்றது...

அவன் மூர்க்கத்தனத்திற்கான காரணம் இக்கதையில் அப்பெண் தன் கணவனை ஏமாற்றியதுதான் என்று கதையை நகர்த்துகிறார் இ.சோ.

அவள் உடல்தான் பிராதான எதிரியாக அவன் முன் நிற்கிறது. 14 ஆண்டுகள் சிறைத்தண்டனை அனுபவித்து அவளுடலை வன்மத்துடன் அவன் அணுகும்போது, அந்த உடல் செல்லக்கண்ணுவின் அந்த உடலாக இல்லை. அவன் பழி தீர்க்க நினைத்த உடல், 'கட்டான உடல், குதிரைக் குட்டி நடை, அந்த மதமதப்பு, பிரெய்சர் கவர்ச்சி.' இப்போது அவன் பார்க்கும் உடல் அந்த உடலாக இல்லை என்பார் இ.சோ.

> முகமெல்லாம் அம்மைத் தழும்புகள், ஒட்டி வற்றிப்போன சுருக்கம் விழுந்த கன்னங்கள்... நரைத்துப் பறந்து கலைந்து

பெண்ணையும் பெண்ணுடலையும் மனம், சிந்தனை எதுவுமற்ற ஹார்மோன்கள் மட்டும் சுரக்கின்ற சுரப்பிகளாக மட்டுமே பார்த்திருக்கின்றன. தாங்கள் விமர்சனம் ஒரு சரியான பார்வை என்றாலும் சிலருக்கு வாசிக்க வேண்டும் என்ற எண்ணத்தை தூண்டியுள்ளது. நல்ல விஷயம்.

**வ.ரா. தமிழ் நேசன்:** சிறப்பான விமர்சனம். உறவு மீறல்களும் கட்டுடைத்த காம உணர்வுகளும் கொண்ட கதைக் களங்கள் இரா.சோவின் கதைக் களங்கள். எந்த நியாயங்களும் கற்பிக்காது காமம் மட்டுமே துருத்திக் கொண்டிருக்கும் கதைகள் வெறும் கிளர்ச்சிக்கானவை. வாழ்க்கை இயல்பில் அப்படி இருப்பதில்லை என்பதே யதார்த்தம்.

**எஸ். முத்துமாரி:** சரியான பார்வை. இக்கதைகளை வாசிக்கும் போது ஆணின் மனம் அடையும் கிளர்ச்சிகள் பேசப்பட்ட அளவு பெண்ணின் பார்வையை கதை பேசவில்லை எனத் தோன்றியது.

**இறைமொழி:** இந்த கட்டுரையில் சற்றும் எனக்கு உடன்பாடில்லை. ராசோவின் சிந்தனையையும் அவரின் எழுத்தில் உள்ள ஆழ் அர்த்தங்களையும் புரிந்துகொள்ளாதவர்கள், மேலோட்டமாக அல்லது அவரின் படைப்புகளை முழுதும் உள்வாங்கி வாசித்திராவர்களால் மட்டுமே இப்படி சொல்ல முடியும். யார் வெறும் ஹார்மோன்களை வைத்து எழுதியது? ஆணுக்கும் பெண்ணுக்கும் உணர்வு இயல்பானது, பொதுவானது என்று சொன்ன அவரையா இப்படி சொல்கிறீர்கள்? என்ன தெரியும் உங்களுக்கு? அவரிடம் பல முறை நேரில் சந்தித்து கேள்விகளைக்கேட்டவள் நான். பாலினசமத்துவத்தை அவரை விட யாராலும் ஆழமாக எழுதிவிட முடியாது. தவிர்க்க முடியாதது அவரது பணி எழுத்துலகில்.

ஒரு பெண் இன்னொருவருடன் பாலியல் உறவு வைத்ததிருந்ததாக எழுதினால் அதற்கு இதுதான் அர்த்தமா? காலாகாலமாக ஆண்கள் செய்கிறார்களே, அதை எழுதினால் எவ்வித பேச்சும் இல்லை. இங்கு பெண்ணும் செய்கிறாள். அதை அவர் வேறு கோணத்தில் பார்க்கிறார். எப்படி என்றால், பெண் செய்தால் அது அபத்தம், புனிதம் கேட்டுவிட்டதாக வாயில் அடித்துக்கொள்ளும் ஆட்களுக்கு அவர் சொல்வது பெண்ணுக்கும் பாலியல் சுதந்திரம் உண்டு என்று தான். உடனே, பெண்கள் தப்பு செய்கிறார்களா அல்லது செய்யணுமா என்று எல்லாம் கேட்காதீர்கள். பெண்ணும் செய்கிறாள் அதை ஒப்புக்கொள்ள மனசு வேண்டும். அவள் எந்த சூழலில் செய்கிறாள் என்பதெல்லாம் பிறகு.

பெண்ணியத்தை அவரைத் தாண்டி அவ்வளவு நுணுக்கமாக எழுதியதாக யாரும் இல்லை என்று சொல்வேன். என் சந்தேகங்களை தயக்கங்களைத் தகர்த்தவர். இன்று தயக்கமின்றி நான் பேசாப் பொருளை எழுதுகிறேன் என்றால் அது அவர் தந்த தெளிவு தான். மரணப் படுக்கையிலும் அவர் தவித்தது, எழுத அவ்வளவு விடயம் இருந்தும், உடல் ஒத்துழைக்கவில்லையே என்றுதான். கடைசியாக அவர் சொன்னது: "இரண்டு நாவல், 10 சிறுகதைகள் உள்ளது. இரண்டு வாரம் இருந்தால் போதும்". ஆனால், அவரால் பேசவும் முடியவில்லை. எவ்வளவு முயற்சித்தும், அவற்றை அவரிடமிருந்து வெளியே எடுக்க இயலாது போனதில வருத்தம் தான். படைப்பாளியை இப்படி கொச்சைப்படுத்தாதீர்கள்!

மறு பரிசீலனை செய்ய வேண்டும் அம்ருதா இதழ். ●

# சாகசம், வீரம், துயரம் சுதேசிக் கப்பலின் கதை

ஷங்கர்ராமசுப்ரமணியன்

காலனிய வரலாற்றாய்வாளர்களில் தெற்காசிய அளவில் மதிக்கப்படும் அறிஞர்களில் ஒருவர் ஆ.இரா. வேங்கடாசலபதி. இவர் நாற்பதாண்டுகள் ஆய்வு செய்து எழுதி, ஆங்கிலத்தில் சமீபத்தில் வெளிவந்துள்ள நூல் 'சுதேசி கப்பல் - வ.உ.சி.தம்பரம் பிள்ளையும் பிரிட்டிஷ் கடல் வர்த்தக சாம்ராஜ்யத்துக்கு எதிராக நடத்திய போராட்டமும்' (SWADESHI STEAM: V.O. Chidmbaram Pillai and the Battle against the British Maritime Empire). தென்னிந்தியாவின் திலகர் என்று போற்றப்பட்ட வ.உ.சி. தலைமையேற்று நடத்திய சுதேசி இயக்கத்தின் எழுச்சி, அது சந்தித்த ஒடுக்குமுறையின் நுணுக்கமான வரலாறு இந்நூல்.

ஆட்சி அதிகாரமும் கொடுங்கோன்மையும் வல்லமையும் கொண்டிருந்த பிரிட்டிஷாரின் அரசியல் ஆதிக்கம், வர்த்தக ஆதிக்கம் இரண்டையும் நேருக்கு நேராகச் சந்தித்து மோதுவதற்குத் தமிழ்நாட்டின் தென்கோடி ஊரொன்றில், சாதாரண வழக்கறிஞர் ஒருவர் மேற்கொண்ட முயற்சிதான் 'சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் நிறுவனம்'.

தென்னிந்தியாவின் கலாசார, வர்த்தக, ஊடகத் தலைநகரமாக இருந்த மெட்ராஸிலிருந்து அல்ல, இன்றைக்கும் அன்றாடத்தின் மந்தகதியில் பெரிய சம்பவங்களின்றி, வரலாற்று நிசப்தத்தில், தென்னகத்தின் மூலையிலிருக்கும் இரண்டு சிறுநகரங்களான தூத்துக்குடி, திருநெல்வேலி ஆகியவற்றை மையமாகக் கொண்டு, மிகச் சாமானிய மக்களும் ஆங்கிலேயரை எதிர்த்த சுதேசி இயக்கத்தின் மாபெரும் நிகழ்வுகளில் ஒன்றுக்கு தூண்டிய வ.உ.சி.யின் கனவுத் திட்டம், 'சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் நிறுவனம்'.



கப்பல்களின் தரம், தொழில்நுட்ப அம்சங்கள் எதுவுமே அறியாத நிலையில் இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் கப்பல் போக்குவரத்தில் கோலோச்சிக் கொண்டிருந்த 'பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி'யின் லாபநோக்கு மற்றும் வர்த்தக நலன்களுக்கு சில ஆண்டுகள் அச்சுறுத்தலைக் கொடுத்த இந்த 'சுதேசி ஸ்டீம் நாவிகேஷன்' கப்பல் நிறுவனத்தின் கதை இது. பத்து கிராம் தங்கம் 90 ரூபாய்க்கு விற்ற காலத்தில், தூத்துக்குடியில் சில நூறு ரூபாய்களை மாத வருவாயாகச் சம்பாதிக்கக்கூடிய வழக்கறிஞராக இருந்த வ.உ.சி. என்ற பிரமுகரின் இளமையையும் ஆற்றலையும் உறிஞ்சி, துயரங்களையும் அல்லல்களையும், வெளிச்சமே பார்க்க இயலாத இருண்ட பிற்கால வாழ்க்கையையும் பரிசளித்த ஒரு கதை இது. வ.உ.சி., அவரது மனைவி மீனாட்சி அம்மையார், குழந்தைகள் மீது மட்டுமல்லாமல் வ.உ.சி.யின் சுதேசிய லட்சியத்துக்கு உறுதுணையாக இருந்த பத்துக்கும் மேற்பட்ட ஆளுமைகளின் வாழ்க்கையையே சிதறடித்த ஒரு கனவின் கதையும் இது.

சைவ சித்தாந்த சபைப் பணிகளில் ஈடுபடுத்திக் கொண்டு, 'லௌகீகத்துக்கும் வைதிகத்துக்கும் அவசியமான ஒழுக்கங்களை எடுத்துப் போதிக்கும் பத்திரிகை' என்ற அறிவிப்போடு வெளிவந்த 'விவேகபானு' இதழை நண்பர்களோடு இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் நடத்திய வ.உ.சி., சிவனே என்று சுகமாக இருந்திருக்கலாம். வங்காளத்தில் உருவான சுதேசி இயக்கத்தைச் சேர்ந்த ராமகிருஷ்ணானந்தரை சந்தித்த நிகழ்ச்சிதான் வ.உ.சி., தென்னாட்டுத் திலகராக மாறிய பரிணாமகதியைத் தூண்டிய சம்பவமாகும்.

சுதேசியம் ஒன்றே சுகம்பல அளிக்கும்
இதேஎன் கடைப்பிடி' என்றனன். அவனுரை
வித்தென விழுந்தது மெல்லிய என்னுளம்
சித்தம் அதனைச் சிதையாது வைத்தது
--வ.உ.சி.யின் சுயசரிதை

A.R. Venkatachalapathy

SWADESHI STEAM

சுதேசி கப்பல் - வ.உ.சிதம்பரம் பிள்ளையும் பிரிட்டிஷ் கடல் வர்த்தக சாம்ராஜ்யத்துக்கு எதிராக நடத்திய போராட்டமும்'




வ.உ.சி., சுதேசி இயக்கத்தைத் தலைமையேற்று நடத்தியதால் அடைந்த துயரங்களைப் பார்க்கும்போது, 'சுகம்பல அளிக்கும்' என்று உரைக்கப்பட்டது நகைமுரணாகவே தொனிக்கலாம். ஆனால், வ.உ.சி. தான் எடுத்துக்கொண்ட பொதுப்பணியால் அவரது லௌகீக வாழ்க்கையின் மைய அச்சே முறிந்துபோனாலும், சுதந்திரப் போராட்ட வரலாற்றில் வீரமும் தீரமும் சாகசமும் நேர்மையும் நற்பண்பும் கருணையும் கொண்ட மாவீரராகவே காலம் தன் இதயத்தில் அவரை பொறித்திருக்கிறது. வ.உ.சி., கருதி உத்தேசித்த சுகம் பலவாக இதுவே இருந்திருக்கலாம் போலும்.

தூத்துக்குடியில் தருமசங்க நெசவுசாலை, தேசியப் பண்டகசாலை ஆகிய அமைப்புகளின் மூலமும், கடற்கரையிலும் திருநெல்வேலி தாமிரபரணிக் கரையிலும் நடத்திய பௌர்ணமிக் கூட்டங்களின் மூலமும், சுதேசி இயக்கப் பணிகளைத் தொடங்கிய வ.உ.சி., 1906ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 'சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி' நிறுவனத்தைப் பதிவு செய்தார். தூத்துக்குடியிலிருந்து கொழும்புவுக்கு தேயிலைத் தோட்டப் பணியாளர்களையும் சரக்கு, கால்நடைகளையும் ஏற்றிச்செல்லும் வர்த்தகத்தில் ஏகபோகமாகஇருந்த 'பிரிட்டிஷ் இந்தியா நேவிகேஷன்' நிறுவனம், ஆங்கிலேய அரசோடு சேர்ந்து தூத்துக்குடி வர்த்தகர்களுக்கு விதித்த கெடுபிடிகளும் இனவாத நடவடிக்கைகளும் தென்மாவட்டங்களிலுள்ள வர்த்தகர்களுக்கு ஏற்கெனவே அதிருப்தியை ஏற்படுத்தியிருந்தன. இந்தப் பின்னணியில்தான் தங்கள் தொழில், வர்த்தகத்துக்கென்றும் சுதேசி அரசியலையும் வலுப்படுத்தும் வண்ணம் வ.உ.சி.யின் எண்ணத்தில் உதித்த திட்டம் இது.

பங்கு ஒன்றுக்கு 25 ரூபாய் வீதம் 40 ஆயிரம் பங்குகளை விற்று இந்நிறுவனத்திற்கு மூலதனமாக 10 லட்சம்திரட்ட முடிவுசெய்யப்பட்டது. முதல்நிலையில் 12 பேர் இயக்குநர்களாக இடம்பெற்றிருந்தனர். அவர்கள் தூத்துக்குடியைச் சேர்ந்த வர்த்தகர்கள் என்று குறிப்பிடப்படுகின்றனர். ஹாஜி ஃபக்கீர் முகம்மது சேட், எஸ்.வி. நல்லபெருமாள் பிள்ளை, ஏ.எம்.எம். அருணாசலம் பிள்ளை, எஸ்.எஸ்.வி. கிருஷ்ண பிள்ளை, சி.த. ஆறுமுகம் பிள்ளை, வேலாயுதம் பிள்ளை, ஆதிநாராயணச் செட்டியார், வெங்கடாசலம் செட்டியார், முகைதீன் காதிர்ஷா மரக்காயர், அந்தோணி சவரிமுத்து ரோட்ரிக்ஸ், எம்.வி. மாய நாடார், எம்.எச்.ஏ. ரஹிமான் சேட் ஆகியோர்.

நிறுவனத்தின் தலைவராக மதுரை நான்காவது தமிழ் சங்கத்தை நிறுவிய பாண்டித்துரைத் தேவர் விளங்கினார். வ.உ.சி.யின் சுதேசிக் கப்பல் கனவுக்குப் பெரும் நஷ்டத்தையும் பலியையும் சந்தித்தவர் பாண்டித்துரை தேவர். ஒன்றரை லட்சம் பணத்தைக் கொடுத்திருக்கிறார். சுதேசி கப்பல் நிறுவனம் வீழ்ந்தவுடனேயே அவரும் மாரடைப்பில் பலியானார். பாரதியின் 'இந்தியா' பத்திரிகை அதிபரான மண்டையம் சீனிவாச்சாரியின் குடும்பமும் சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் நிறுவனத்தை நிலைநிறுத்தி, பெரும் வீழ்ச்சியையும் பண நஷ்டத்தையும் சந்தித்தது. வழக்கறிஞராகக் கொடிகட்டிப் பறந்த சி. விஜயராகவாச்சாரியும் வ.உ.சி. மேல் கொண்ட மதிப்பும் பக்தியும் காரணமாக நிறைய நஷ்டங்களைச் சந்தித்தவர். ராஜாஜி ஆயிரம் ரூபாய் வழங்கியிருக்கிறார். பெரியார் தனது சொந்தப் பணமாக 5 ஆயிரம் ரூபாய் வழங்கியிருக்கிறார். அத்துடன் தனது முஸ்லிம் வியாபார நண்பர்களிடம் கேட்டு 30 ஆயிரம் ரூபாயை தனது சார்பில் வழங்கியுள்ளார். மருத்துவரும் இசையறிஞருமான தஞ்சை ஆபிரகாம் பண்டிதரும் தொடக்க நிலையில் பங்குகளைப் பெற்றவர்களில் ஒருவர். பாரதியும் தனது லட்சிய வேகத்தால் சுதேசி கப்பல் நிறுவனத்துக்காக நேரடியாகப் பங்குகளைப் பெறுவதில் முன்நின்றும் கட்டுரைகள் பலவற்றை உணர்ச்சிகரமாக எழுதியுமுள்ளார். பாரதியின்

தந்தையும் பஞ்சாலை நிறுவனம் நிறுவி தனது சொத்துகளை இழந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. வ.உ.சி. மீது பாரதிக்கு ஏற்பட்ட விசேஷ பிரியத்துக்கு இந்தப் பின்னணியும் காரணமாக இருக்கலாம் என்று கூறுகிறார் நூலாசிரியர் ஆ.இரா. வேங்கடாசலபதி.

இந்தத் துயர வரலாற்றில் அபூர்வமான இன்னொரு பெயரும் சம்பந்தப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். சுதேசி கப்பல் நிறுவனம் சிரமங்களை சந்திக்கத் தொடங்கி,வ.உ.சி.யும் அரச நிந்தனைக் குற்றச்சாட்டில் இரட்டை ஆயுள் பெற்று சிறைக்குச் சென்றபின்னர், இந்திய விடுதலை இயக்கத்துக்கு எதிராக இருந்த அயோத்திதாசப் பண்டிதர், வ.உ.சி.க்கு ஏன் திடீர் சுதேசி பக்தி என்று விமர்சித்து எழுதியுள்ளதையும் ஆ.இரா. வேங்கடாசலபதி பதிவுசெய்துள்ளார்.

கர்சன் பிரபுவின் வங்கப் பிரிவினை நடவடிக்கையால் அங்கே தூண்டப்பெற்ற சுதேசி இயக்கத்தின் நடவடிக்கைகள், வடமாநிலங்களில் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையிலான கலவரங்களாகவும் உருமாறியுள்ளது. ஆனால், தென் தமிழ்நாட்டில் வ.உ.சி.யும் சுப்ரமணிய சிவாவும் முன்னெடுத்த சுதேசி இயக்கத்தில் தமிழ்நாடு மட்டுமின்றி கொழும்புவிலிருந்தும் தென்னாப்பிரிக்காவிலிருந்தும் முஸ்லிம் மக்கள் ஆதரவாகவும் பங்காளிகளாகவும் இருந்து செயல்பட்டுள்ளனர். சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனியின் இயக்குநர்களாக இடம்பெற்ற 12 பேரின் பெயர்களிலிருந்தே வெவ்வேறு சமூகப் பிரதிநிதிகள் இடம்பெற்றிருப்பதைப் பார்க்க முடிகிறது.

தற்காலத்தில் இந்தியா முழுவதும் இந்துப் பெரும்பான்மைவாதமும் மதவாதமும் இந்து சாமானியர்கள் மீதும் ஆதிக்கம் செலுத்தும் சூழலில், தமிழ்நாடு, நெருப்புக்கிடையே தீவாக மிஞ்சி மதவாதத்துக்கு ஆட்படாமல் தப்பியிருப்பதை இதன் பின்னணியில் வைத்துப் பார்த்தல் வேண்டும்.

ஆ. இரா. வேங்கடாசலபதியின் இந்த நூலில் வ.உ.சி.யின் நேர்முகத்தைக் காண்பது மிகவும் அபூர்வமாகவே இருக்கிறது. சுதேசி நாவாய் நிறுவனத்துக்காக வ.உ.சி.யின் செயல்பாடுகள், மேற்கொண்ட பயணங்கள், எழுதிய கடிதங்கள், கொடுத்த விளம்பரங்கள் வழியாகவே வெளிப்படுகிறார். அக்காலத்தில் சுதேசி இயக்கத்தையும் வ.உ.சி.யின் சுதேசி கப்பல் வர்த்தக முயற்சிகளையும் ஆதரித்த 'சுதேசமித்திரன்', 'தி இந்து', 'இந்தியா' போன்ற இதழ்களின் பத்திரிகைச் செய்திகள் வழியாக சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனியின் தோற்றமும் பணிகளும் இடர்ப்பாடுகளும் முடிவும் வரையப்பட்டுள்ளன. போலீஸ், உளவுத்துறை அறிக்கைகள், சர்வதேச கப்பல் போக்குவரத்து டைரக்டரிகள், ஆவணங்களையும் தேடிச் சேகரித்து இந்த நூல் ஆக்கப்பட்டுள்ளது.

பிரிட்டிஷ் இந்தியா கப்பல் நிறுவனத்துக்கு ஆதரவாகவும் சுதேசி கப்பல் நிறுவனத்தின் வாய்ப்புகளைப் படிப்படியாக முடக்கவும் ஆங்கிலேய ஆட்சியாளர்களும் கலெக்டர் விஞ்சும், வாஞ் சிநாதனால் பின்னர் கொல்லப்பட்ட ஆஷ் துரையும் மேற்கொண்ட நடவடிக்கைகள், பேச்சுவார்த்தைகள் ஆகியவையும் இந்த நூலில் தொகுக்கப்பட்டுள்ளன.

வ.உ.சி.யோ அவருடன் இருந்த சோமசுந்தர பாரதி போன்றவர்களோ சமகாலத்தவர்களோ முழுமையாக எழுதாமல் மறைந்துபோன சுதேசிக் கப்பல் வர்த்தகத்தின் ஏற்றமும் வீழ்ச்சியும் துல்லியமாக இந்த நூலில் பதிவாகியுள்ளது.

ஆஷ் கொலை சம்பவத்துக்குப் பிறகு சிறைத்துறை அதிகாரி வ.உ.சி.யைச் சந்தித்து செய்தியைச் சொல்லும் இடத்தில் பார்க்கிறோம். கோவை சிறையில் மனைவி மீனாட்சி அம்மையார் பார்வையாளராகச் சென்று பார்க்கும்போது பார்க்கிறோம்.

இங்கிருந்து பார்க்கும்போது, மிகவும் பதிவாகாத ஒரு மங்கிய சரித்திரத்தின் நிழலுக்குள் வ.உ.சி. என்ற ஆளுமையின் மகத்துவம் எத்தகையது என்பதைக் காண்பிக்கும் காட்சிகளை நிறைய பொதிந்து வைத்திருக்கிறது இந்நூல்.

வ.உ.சி.யின் அரசியல் செயல்பாடுகளால் சுதேசி கப்பல் நிறுவனத்தின் வர்த்தக நலன்கள் பாதிக்கும் என்று அந்நிறுவனத்தின் மிதவாதப் பங்குதாரர்கள் வ.உ.சி.யைப் பொறுப்பிலிருந்து விரட்டுகின்றனர். வ.உ.சி., வர்த்தகத்துக்காக அல்ல, அரசியல் நடவடிக்கையாகவே சுதேசி கப்பல் நிறுவனத்தைத் தொடங்கினார் என்ற உண்மையே அவர்களுக்குப் புலப்படவில்லை. சுதேசி கப்பல் நிறுவனத்தின் பொறுப்புகளிலிருந்தெல்லாம் விலகி சிறையில் வருந்திய நிலைமையிலும் சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் நிறுவனத்தைச் சார்ந்தவர்களும் அதன் பாத்தியதாரர்களும் வ.உ.சி.க்குத் தொடர்ந்து கடித உறவில் இருந்திருக்கின்றனர். வ.உ.சி.யின் மேல் பக்திகொண்டு அவரைத் தண்டனையிலிருந்து விடுவிக்கவும் வழக்கு நடத்தவும் நிதிகளைச் சேகரித்திருக்கின்றனர். வ.உ.சி.யை தங்கள் நிறுவனத்தோடு அடையாளம் காணக்கூடாது என்று வெளியேற்றிய சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் நிறுவனம், நிலைகுலைந்து போன நிலையில் கடைசி அலுவலக முகவரிக்காக ஒண்ட வேண்டியிருந்தது, கணவன் வ.உ.சி சிறைத்தண்டனையில் இருக்க வறுமையில் உழன்று கொண்டிருந்த மீனாட்சி அம்மாவின் தூத்துக்குடி வீட்டில்தான். சாதி, சமயம், இன வித்தியாசங்களைத் தாண்டி மக்களிடம் பிரியத்தையும் செல்வாக்கையும் வ.உ.சி. ஈட்டியிருந்திருக்கிறார்.

வ.உ.சி.யிடம் கப்பல் மாலுமியாகப் பணியாற்றி


வ.உ.சி. வெவ்வேறு பருவங்களில்

விடைபெற்றுச் சென்ற இத்தாலியர் ஒருவர் பளிங்கில் வ.உ.சியும் அவர் மனைவி மீனாட்சியும் இருக்கும் புகைப்படத்தைப் பதித்து, தூத்துக்குடியின் அடையாளமாக அதைச் சுற்றி முத்துக்களைப் பதித்து, அதனை நினைவுப் பரிசாக கொடுத்துச் சென்றிருக்கிறார்.

அரச நிந்தனை வழக்கில் வ.உ.சி.யை விசாரித்து தண்டனை அளித்த நீதிபதி இ.எச். வாலேஸ், பின்னர் அவருடைய வழக்கறிஞர் பணி செய்யும் உரிமத்தைப் புதுப்பித்துக் கொடுக்கிறார்.

கோவைச் சிறையில் செக்கிழுக்கும் தண்டனை அளிக்கப்பட்ட போது தனது சக கைதிகளாலேயே தன்னுயிர் காக்கப்பட்டது என்று சுயசரிதையில் வ.உ.சி. எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது.

செக்கினை என்னோடு சேர்ந்து தள்ளியோர்
'நாங்களே தள்ளுவோம், நமன்கள் போன்ற
சூப்பிரண்டெண்டு காட்ஸனும் ஜெயிலரும்
வருங்கால் எம்முடன் வந்திது தள்ளுமின்;
போய்நிழல் இருந்து புசிமின் எள்ளும்
வெல்லமும்' என்றே விளம்பினர் அன்போடு.

வ.உ.சி. மேல் அவர்கள் வைத்த மதிப்பு இவ்வாறு இருந்திருக்கிறது.

தமிழில் சென்ற நூற்றாண்டில் மேடைப்பேச்சு மூலம் வெகுமக்களைத் திரட்டிய முன்னோடிகளில் ஒருவர் என்று வ.உ.சி.யை இந்நூலில் நிறுத்துகிறார் ஆ.இரா.வேங்கடாசலபதி. வ.உ.சி.யின் பொதுக்கூட்ட உரைகள்தான் சாதாரண மக்கள் சந்தித்த முதல் அரசியல் உரைகள் என்று ஆய்வாளர் பெர்னார்ட் பேட் வழி குறிப்பிடுகிறார். தமிழ் அரசியல் செய்தி ஊடகமான ஒரு ஜனநாயக நடைமுறைக்கு வ.உ.சி.யின் பேச்சுகள்தான் முதல் வித்தை இட்டிருக்கின்றன.

தேசியவாதம், ஆங்கிலேய ஆட்சியால் இந்திய மக்கள்படும் அல்லல்களை, வ.உ.சி.யும் சுப்ரமணிய சிவாவும் ஒரு விழிப்புணர்வுக் கல்வியாகவே தங்கள் உரைகள் வழி சாமானிய மக்களுக்குப் புகட்டியிருக்கிறார்கள். ரஷ்யப் புரட்சியும் உலகளாவிய சுதந்திர இயக்கங்களைப் பற்றிய செய்திகளும் அங்கே விவாதிக்கப்பட்டது ஆங்கில ஆட்சியாளர்களை அதிர்ச்சிகொள்ளச் செய்திருக்கிறது.

ஒரு தனித்துவமற்ற அசிங்கமான நகரமாக ஆங்கிலத் துரைகளால் விவரிக்கப்பட்ட தூத்துக்குடி நகரத்தில், சுதேசியுணர்வையும் கொடுங்கோன்மை எதிர்ப்பையும் குமாஸ்தாக்கள், வழக்கறிஞர்கள் போன்ற மேல்மட்டத்தினரிடம் மட்டுமல்ல, பாட்டாளிகளிடமும் கூலிகளிடமும் தன் பேச்சால் ஏற்படுத்தியிருக்கிறார், வ.உ.சி..

வ.உ.சி தூத்துக்குடியில் வெகுமக்களிடம் ஏற்படுத்தியிருந்த எழுச்சிக்கு கீழ்க்கண்ட சம்பவம் ஒரு சோற்றுப் பதம்.

ஆங்கிலேய ஆட்சிக்கு ஆதரவு தந்த ஒரு தூத்துக்குடி வழக்கறிஞருக்குச் சவரம் செய்வதற்காக, ஒரு சிகை திருத்துபவர் அவர் வீட்டுக்கு வருகிறார். வேலை தொடங்கி இருவருக்கும் உரையாடல் சென்றபோது வழக்கறிஞரின் சுதேசியக் கருத்துகளால் கொதிப்படைந்த சிகை திருத்துபவர் பாதியில்


மனைவியுடன் வ.உ.சி.

தனது வேலையை நிறுத்திவிடுகிறார்; வேறு தொழிலாளர்களும் அவருக்குச் சவரம் செய்ய மறுத்துவிடுகின்றனர். கடைசியில் அந்த வழக்கறிஞர் தனது சவரத்தை முடிக்க ரயிலேறி மதுரைக்குச் செல்ல வேண்டியிருந்திருக்கிறது.

1908ஆம் ஆண்டு மார்ச் 9ஆம் தேதி விபின் சந்திரபால் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட நிகழ்வைக் கொண்டாடும் விதமாகத் தடையை மீறிக் கூட்டம் நடத்தியதற்காக வ.உ.சி, சுப்பிரமணிய சிவா, பத்மநாப அய்யங்கார் ஆகிய மூவரும் கைது செய்யப்பட்டதையடுத்து நடைபெற்ற போராட்டமும் மக்களின் அனைத்துத் தரப்பினரும் இணைந்த எழுச்சி என்றே சொல்லலாம். தற்போது திருநெல்வேலி ஜங்ஷன் என்றழைக்கப்படும் பகுதிக்கருகில் உள்ள வீரராகவபுரத்தை மையமாக கொண்டு நடந்த போராட்டம் அது. யாருமே தூண்டாமல் வ.உ.சி. உள்ளிட்டோரின் கைதுக்காக செய்யப்பட்ட எதிர்வினை. தூத்துக்குடியில் கறிக்கடைக்காரர்கள் ஐரோப்பிய வாடிக்கையாளர்களுக்கு இறைச்சி கொடுக்க மறுத்து, கொழும்புவிலிருந்து இறைச்சியை இறக்குமதி செய்யவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.

திருநெல்வேலியில் கல்லூரி, அரசு அலுவலகங்கள் அனைத்தும் தாக்கப்பட்டன. சப்ரிஜிஸ்ட்ரார் அலுவலகத்தைத் தவிர வேறு எல்லா இடங்களும் அடித்துச் சூறையாடப்பட்டன. நகராட்சி அலுவலச் சுவர் இடித்துத் தள்ளப்பட்டது. மண்ணெண்ணெய்க் கிடங்குக்குத் தீ வைக்கப்பட்டு மூன்று நாள் விடாமல் எரிந்துள்ளது. நான்கு பேர் துப்பாக்கிச் சூட்டில் இறந்துள்ளனர். இருபதாண்டுகளுக்கு முன்னர் மாஞ்சோலைத் தொழிலாளர்கள் போராட்டத்தில் 17 பேர் துப்பாக்கிச் சூட்டில் இறந்த சம்பவம் தான் அதற்கடுத்து ஞாபகம் வரும் திருநெல்வேலிப் போராட்டமாக உள்ளது.

திருநெல்வேலிக் கலவரத்துக்குப் பிறகுதான், வ.உ.சி. தொடங்கிய சுதேசி கப்பல் நிறுவனத்தை வேரோடும் வேரடி மண்ணோடும் அழித்துவிட வேண்டுமென்று ஆங்கிலேய அரசு முடிவெடுக்கவும் வேண்டியிருந்தது.

இந்தக் கலவரத்தில் வெள்ளையர்கள் யாரும் நேரடியாக தாக்குதலுக்கு உள்ளாகவில்லை என்பது நல்நிமித்தம். ஆனால், இரண்டு வெள்ளையர்களை வற்புறுத்தி வந்தே மாதரம் மற்றும் சுயராஜ்யம் கோஷங்களை போராட்டக்காரர்கள் எழுப்பச் சொல்லியுள்ளனர்.

‘தி இந்து’ பத்திரிகையின் உரிமையாளரும் ஆசிரியருமான எஸ். கஸ்தூரிரங்க அய்யங்கார், இந்தக் கலவர்த்தைப் பதிவுசெய்வற்காக சிறப்புச் செய்தியாளரை திருநெல்வேலிக்கு அனுப்புகிறார். இதில் மாணவர்கள், தொழிலாளர்கள், வழக்கறிஞர்களுடன் எல்லாவிதமான மக்களும் பங்குபெற்றிருந்ததை சலபதியின் நூல் காட்டுகிறது. 10 ஜட்கா வண்டியோட்டிகள், ஒரு உணவு விடுதி நடத்துபவர், ஒரு நாவிதர், ஒரு தங்க ஆசாரி, மூன்று ஓய்வு பெற்ற போலீசார், ஒரு நாட்டு மருத்துவர், ஆடு மாடுகளை விற்றுக்கொடுக்கும் தரகர், நாள்கூலி, விறகுவெட்டி, நெசவாளி, கடைக்காரர்கள் உள்ளிட்ட 100 பேர் போராட்டம் நடத்தியதற்காகத் தண்டிக்கப்பட்டுள்ளனர். ஊரடங்கு உத்தரவுக்கு எதிராக மேலூர், வண்டிப்பேட்டையில் கூட்டங்கள் நடந்துள்ளன.

திருநெல்வேலி, தூத்துக்குடி இரட்டைக் கலவரங்களுக்குச் சற்று முன்னர்தான் வ.உ.சி., கோரல் மில் தொழிலாளர்களை ஒருங்கிணைத்து கூலி உயர்வு, ஞாயிற்றுக்கிழமை விடுமுறைக் கோரிக்கைக்கான போராட்டத்தையும் நடத்தி வெற்றியும் கண்டிருந்தார். வ.உ.சி. கைது என்ற அரசியல் காரணத்தை முன்னிட்டு, இந்திய அளவில் ஆலைத் தொழிலாளர்கள் அரசியல் போராட்டத்தில் கலந்துகொண்ட நிகழ்வும் இதுதான் முதல்முறை. கோரல் மில் தொழிலாளர்கள் 1500 பேர், ராலி பிரதர்ஸ், பெஸ்ட் அன்கோ போன்ற பிரிட்டிஷ்சார் நடத்தும் நிறுவனங்களிலிருந்தும் தொழிலாளர்கள் வ.உ.சி. கைதுக்கு எதிரான போராட்டத்தில் இறங்கியுள்ளனர்.

பத்து லட்ச ரூபாய் முதலீட்டை பங்குகள் மூலம் திரட்டத் திட்டமிட்டாலும் 6 லட்ச ரூபாயையே வ.உ.சி.யால் திரட்ட இயல்கிறது. சொந்தமாக எஸ்.எஸ். காலியா, எஸ்.எஸ். லாவோ ஆகிய கப்பல்களை வாங்குவதற்கு முன்னால் வாடகை அடிப்படையிலோ


(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

(10ஆம் பக்கத் தொடர்ச்சி)



'கப்பலோட்டிய தமிழன்' திரைப்படத்தில் வ.உ.சி.யாக நடிக்கும் சிவாஜிகணேசன்

குத்தகையாகவோ 'மாங்கு சீட்டன்' கப்பலைத் தூத்துக்குடிக்கும் கொழும்புக்கும் ஓட்டியுள்ளார். தூத்துக்குடி செயற்கைத் துறைமுகம் என்பதால் ஆழமற்ற பகுதியிலிருந்து ஆழமான பகுதியிலிருக்கும் கப்பலுக்குப் பயணிகளைக் கொண்டு சேர்க்கும் மிராண்டா என்றொரு படகையும் கூடுதலாக வாங்கியிருக்கிறது சுதேசி நாவாய் நிறுவனம்.

1907ஆம் ஆண்டிலும் 1908ஆம் ஆண்டிலும் மாதம் தோறும், பிரிட்டிஷ் இந்தியா நிறுவனத்துக்கு 30 ஆயிரம் முதல் 40 ஆயிரம் வரையில் நஷ்டத்தை சுதேசிக் கப்பல் நிறுவனம் ஏற்படுத்தியிருக்கிறது. ஆனாலும் கப்பல் வர்த்தகம் பல்வேறு அடுக்குகளும் ஊடுபாவுகளும் வல்லமையும் சிக்கலான நிர்வாகமும் கொண்டது என்பதால் வ.உ.சி.யாலும் அவரது சகாக்களாலும் தொடரும் நஷ்டங்களைக் குறைக்க இயலவிலை. எஸ்.எஸ். காலியா, எஸ்.எஸ். லாவோ இரண்டு கப்பல்களும் வாங்கிய விலைக்கான தரம் கொண்டவை அல்லவோ என்றும் ஆ.இரா. வேங்கடாசலபதி ஐயுறுகிறார். கப்பல்களை வாங்க வ.உ.சி. நம்பி அனுப்பிய வேதமூர்த்தி முதலியாருக்கும் கப்பல் பற்றி எதுவும் தெரியவில்லை. கொதிகலன்கள் அடிக்கடி தொந்தரவளிக்கின்றன. கப்பலுக்கான எரிபொருளான நிலக்கரியை வாங்குவதிலும் ஆங்கிலேய மாலுமிகள் ஊழலில் ஈடுபட்டு நஷ்டத்தை ஏற்படுத்தியுள்ளனர். சுதேசி கப்பல் நிறுவனத்தால் பாதிக்கப்பட்ட 'பிரிட்டிஷ் இந்தியா நிறுவனம்' இலவசமாகவும் கூலி, சரக்குக் கட்டணத்தை அடிமாட்டு விலைக்குக் குறைத்தும் வ.உ.சி.யின் சுதேசிக் கப்பல் நிறுவனத்துக்குத் தொடர்ந்து தொல்லைகள் கொடுத்து வந்திருக்கிறது. சுதேசிக் கப்பல் நிறுவனத்தின் பங்குதாரர்களிடமும் தொடர்ந்து பேசி, அவர்கள் நம்பிக்கையை சிதைத்துப் பலவீனப்படுத்தும் வேலைகளில் ஆங்கிலேயே ஆட்சியாளர்கள், சுதேசி நிறுவனம் இறுதி மூச்சை விடும்வரை மெட்ராஸ் தொடங்கி தூத்துக்குடி வரை செயல்பட்டுள்ளனர். சுதேசி கப்பல் நிறுவனத்தின் முகவர்கள் நன்கொடை, பங்கு நிதிகளைத் திரட்டச் செல்லும் ஊர்களிலெல்லாம் அவர்களை உளவுப் போலீசார் பின்தொடர்ந்துள்ள தகவல்களை சலபதி இந்த நூலில் அருமையாக கோத்துள்ளார்.

சுதேசி இயக்கத்தில் ஈடுபாட்டுடன் திகழ்ந்த வ.உ.சிக்கு சுதேசிக் கப்பல் நிறுவனத்தைத் தொடங்கும் யோசனை உதித்த காரணம் புதிராகவே இருப்பதாக, ஆ.இரா. வேங்கடாசலபதி குறிப்பிடுகிறார். சர்வதேச அளவில் சுதேசி இயக்கத்தில் செயல்பட்ட பெருந்தலைவர்களான திலகரையும் அரவிந்தரையும் சூரத் கூட்டத்திலேயே சந்தித்தவர் வ.உ.சி.

தூத்துக்குடியில் சுதேசி கப்பல் நிறுவனத்தைத் தொடங்கி அகில இந்திய நிறுவனமாக ஆக்கவேண்டுமென்று வ.உ.சி நம்பினாரா? தேசிய அளவில் முதலாளிகளின் பலம் குறித்து அவருக்கு என்ன அளவீடு இருந்தது? முதலீடும் நிபுணர்களின் ஆலோசனையும் உதவியும் தேவைப்படும் கப்பல்

வர்த்தகத்தில் அவர் எப்படிக் குதித்தார்? காலனிய ஆங்கில ஆட்சியாளர்கள் தனது நிறுவனத்தை நடத்துவதற்கு தடைசெய்யாமல் இருப்பார்கள் என்று அவர் நம்பினாரா? பிரிட்டிஷ் வர்த்தக நலன்களுக்கு என்னாகும்?

இப்படியான கேள்விகளைக் கேட்கும் ஆ.இரா. வேங்கடாசலபதி காலம் கடந்த தூரத்தில் இவற்றுக்கான பதில்கள் தெரியவில்லை என்கிறார்.

சாகசம், துணிகரம் இரண்டிலுமே அபத்தப் பரிமாணமும் சேர்ந்துதானே இருக்கும். அது ஒரு ஆளுமையின் வாழ்க்கையில் உருவெடுக்கும் தருணம் எப்போதுமே புதிர்தான் என்ற பதிலைத் தவிர வேறென்ன சொல்லமுடியும்.

வ.உ.சி., திருநெல்வேலி சிறைக்குள் சென்றவுடன் மோதிரம் கழற்றப்படுகிறது. மிதமான செல்வராகவும் மதித்துப் போற்றிய பிரமுகராகவும் இருந்தவரின் வஸ்திரங்கள் களையப்பட்டுக் கைதி உடைக்குள் செல்கிறார். செக்கிழுக்க வைக்கப்படுகிறார். வழக்குக்கான நிதிகளைக் கேட்டு மனைவி வழியாக விண்ணப்பக் கடிதங்களை எழுதுகிறார். வ.உ.சி.யின் சிறைவாழ்க்கை அவரது தம்பியான மீனாட்சி சுந்தரத்தை பித்துக்கொள்ள வைத்தது. வ.உ.சி.யின் சிறைத்தண்டனையால் நொந்துபோய் மரணமடைந்த அவரது தந்தையின் இறுதிச் சடங்குகளைக் கூட வ.உ.சி.யால் நிறைவேற்ற இயலவில்லை. சிறை சிறையாக மாறிக் கொண்டிருந்த கணவனைப் பார்ப்பதற்காக, இரண்டு குழந்தைகளோடு வறுமையில் அல்லாடிய, அவர் மனைவி மீனாட்சி அம்மாவின் துயரக் கதை தனி.

தண்டனைக் குறைப்பு பெற்று நான்கே முக்கால் வருடங்களில் வ.உ.சி. விடுதலையானபோது மாறிய அரசியல், சமூக சூழ்நிலைக்குள் வ.உ.சி. மறக்கப்படும் நபராக மாறிவிடுகிறார். இந்திய தேசிய காங்கிரஸ் காந்தியின் தலைமையில் வ.உ.சி. போன்றவர்களை மறந்துவிட்டு வேறு இடத்துக்கு நகர்ந்துவிடுகிறது. பிற்காலத்தில் சென்னை காங்கிரஸ் அலுவலகத்தில் வ.உ.சி.க்கு சிலைவைக்க எதிர்ப்பு இருந்திருக்கிறது என்றால் நம்ப முடிகிறதா? ம.பொ.சியின் முயற்சியாலேயே அது நிறைவேறுகிறது. பெரியாரின் நண்பராக பார்ப்பனரல்லாதார் இயக்கத்துக்கு நெருங்கியவராக அடையாளம் காணப்பட்டிருக்கிறார் வ.உ.சி. தமிழ்ப்பணி, சமூகப் பணியில் தளராமல் ஈடுபட்டு சிறையிலிருந்து விடுதலை பெற்று சென்னை வாழ்க்கையில் உருவாக்கியதுதான் தபால் ஊழியர் சங்கம்.

திலகரின் உதவியில் 50 ரூபாய் மாத நிதி பெறுகிறார். அரிசி, நெய் வியாபாரம் செய்கிறார். நன்னம்பிக்கை நூல்களை மொழிபெயர்க்கிறார். திருக்குறள் உரை, தொல்காப்பிய உரைகளை எழுதுகிறார்.

அவர் வாழ்க்கையாகிய சமுத்திரத்தில் சுகம்



இந்திய அரசு வெளியிட்ட தபால் தலை

என்னும் தீவுகள் தென்படவேயில்லை மனோசக்தியின் ரகசியத்தை வெளியிட்டு சகல சித்திகளும் பெறுவதற்கான நூல்களை மொழிபெயர்த்த வ.உ.சி.க்குக் என்ன சித்திகள் கிடைத்தன என்றும் நமக்குத் தெரியவில்லை.

1911ஆம் ஆண்டின் முடிவில் சுதேசி கப்பல் நிறுவனம் திவாலாகி, சொத்துகள் விலைபோகின்றன. வ.உ.சி. வாங்கிய கப்பல்கள் மும்பைக்குச் சென்று வரலாற்றிலிருந்தும் மறைந்துபோகின்றன.

கோவைச் சிறையில் அவர் மொழிபெயர்த்த ஜேம்ஸ் ஆலனின் 'மனம் போல் வாழ்க்கை' நூலின் வாசகங்களைப் போலத்தான் இருந்திருக்கிறது அவரது வாழ்க்கை.

> எவன் வருந்துதற்குப் பின்னடையவில்லையோ அவன் செய்து முடித்தற்கு முழு மனங்கொண்டிருக்கும் காரியத்தைச் செய்து முடிப்பதில் ஒரு பொழுதும் தவறமாட்டான்

தூத்துக்குடியின் அடையாளமான வ.உ.சி. சிறைக்குச் சென்று 25 ஆண்டுகளுக்குப் பிறகு பல்வேறு ஊர்களில் வாழ்ந்துவிட்டு இறுதிக் காலத்தைக் கழிக்கவே 60 வயதில் தூத்துக்குடிக்குத் திரும்பினார். இதற்கான காரணமென்ன என்று கேட்கிறார் நூலாசிரியர் சலபதி.

சுதேசி இயக்கம், சுதேசிக் கப்பல் நிறுவனத்தால் சந்தித்த சங்கடங்கள் அவரைத் தூத்துக்குடிக்கு வரவிடாமல் செய்ததா?

திலகரின் வாழ்க்கை வரலாற்றை எழுதத் துணிந்த வ.உ.சி. சுதேசி கப்பல் நிறுவனம் தொடர்பான முழு விவரங்களை ஏன் எழுதவில்லை என்று ஆ.இரா. வேங்கடாசலபதி கேட்கும் கேள்விகளும் முக்கியமானவை.

தன்னுடன் இணைந்து பங்காற்றியவர்களின் துரோக முகத்தால் கசந்து எழுதாமல் போனாரா?

V. O. CHIDAMBARAM PILLAI.
PLEADER.

TUTICORIN.

8-6-1935.

வ.உ.சி. கையெழுத்து

ஸ்வராஜ்யம் என்ற லட்சியத்தை தன்னால் அடையமுடியாமல் போனதன் கசப்பா?

ஆ.இரா. வேங்கடாசலபதிக்கு மட்டுமல்ல நமக்கும் இந்த மர்மங்கள் தொடரும்.

பாரதி, வ.உ.சி, புதுமைப்பித்தன் வழி தமிழ் சமூகம் நவீனமடைந்த வரலாற்றை தனது ஆய்வுக்களனாக கொண்டவர் ஆய்வறிஞர் ஆ.இரா. வேங்கடாசலபதி. சென்னையைச் சேர்ந்த ஆ.இரா. வேங்கடாசலபதி, பள்ளி வயதில் வ.உ.சி. என்ற ஆளுமையால் ஈர்க்கப்பட்டு வரலாற்று ஆய்வில் ஈடுபடத் தொடங்கியவர். 17 வயதில் வ.உ.சி. சார்ந்த தேடலின் காரணமாக, அவரது வெளிவராத கடிதங்களைப் பதிப்பித்ததன் வாயிலாக வ.உ.சி. வரலாற்றை எழுதுவதைத் தொடங்கிவிட்டார்.

இந்த நூலின் துவக்கத் தரவான சுதேசி ஸ்டீம் நேவிகேஷன் நிறுவனத்தின் செயல்பாடுகளைத் தெரிவிக்கும் அறிவிப்பு மடலை (prospectus) சென்னை மறைமலை அடிகள் நூலகத்தில் ஆ.இரா. வேங்கடாசலபதி 1981ஆம் ஆண்டு பார்க்கிறார். அங்கேதான் வ.உ.சி. கைப்பட எழுதிய கடிதங்களும் ‘விவேகபாநு’ இதழ்களும் அவருக்குக் கிடைக்கின்றன. அதிலிருந்து தொடங்கிய பயணத்தில் தமிழ்நாடு ஆவணக்காப்பகத்தில், அன்றைய மெட்ராஸ் மாகாண அரசு காலத்தில் வ.உ.சி. தொடர்பில் நடந்த வழக்கு நடைமுறைகள் தொடர்பிலான விவரங்களைப் பெற்றுள்ளார். புதுடெல்லியில் உள்ள நேரு நினைவு அருங்காட்சியகம் மற்றும் நூலகத்தில் சுதேசமித்திரன் இதழ்கள் கிடைத்துள்ளன. 1996-ல் சார்லஸ் வாலஸ் இந்தியா அறக்கட்டளையின் கீழ் மானியம் பெற்று பிரிட்டனின் பல நூலகங்களில் தனது தேடுதலைத் தொடர்ந்துள்ளார். அப்போதுதான் சுதேசி கப்பலின் அன்றாடப் பயண விவரங்களையும் கூடப் பதிவுசெய்து வைத்திருக்கும் லாயிட்ஸ் ரெஜிஸ்டர் ஆப் ஷிப்பிங் அமைப்பின் தொடர்பு கிடைத்துள்ளது. உலகம் முழுவதுமுள்ள கப்பல்களின் போக்குவரத்தைப் பதிவுசெய்யும் மிகப்பழைய அமைப்பு இது. வாஞ்சிநாதனால் சுட்டுக்கொல்லப்பட்ட ஆஷ் துரையின் குடும்பத்தினரையும் அவரது பேரன் ராபர்ட் ஆஷையும் 2006ஆம் ஆண்டில் அயர்லாந்தில் சந்தித்த ஆ.இரா. வேங்கடாசலபதிக்கு அங்கு சேகரித்து வைக்கப்பட்டிருந்த ஆவணங்கள் முழுச்சித்திரத்தை வழங்கியிருக்கின்றன.

வ.உ.சி.யின் வாழ்க்கை சரிதத்தை எழுதிமுடிக்கும் நிலையில் உள்ள ஆ.இரா. வேங்கடாசலபதி அதற்காக நாற்பது ஆண்டுகளுக்கும் மேல் செய்த பணியின் ஒரு விளைவு ‘SWADESHI STEAM V.O.Chidambaram pillai and the battle against the British Maritime Empire’ நூல்.

எத்தகைய ஒடுக்குமுறைகளுக்கு மத்தியிலும் ஒரு தனிமனிதன் பெரிய கனவொன்றை நனவாக்க முடியுமென்பதன் உதாரணமும், அந்தக் கனவுக்கு, அந்த சாகசத்துக்கு அந்த மனிதன் தந்த விலையையும் சேர்ந்தே பேசும் ஒரு நூல் இது. இந்த நூலுக்காக அறிஞர் ஆ.இரா. வேங்கடாசலபதி செய்திருக்கும் பணிகளும் தமிழ் சூழலில் ஒரு சாகசக் காரியமே. ●

**நன்றி: அகழ்**

# வரலாற்றுக்கென்று தனித்த வாசகர் வட்டம் இல்லை

**ஆ.இரா. வேங்கடாசலபதி**

**நேர்கண்டவர்: ஷங்கர்ராமசுப்ரமணியன்**

வரலாற்றாய்வாளர் ஆ.இரா.வேங்கடாசலபதி. வ.உ.சி., பாரதி, புதுமைப்பித்தன் வழியாக தமிழ் சமூகம் நவீனமடைந்த பின்னணிதான் இவரது களம். வ.உ.சி. வாழ்க்கை சரிதத்தை நிறைவுசெய்யும் பணியில் உள்ள ஆ.இரா. வேங்கடாசலபதியிடம் கேள்விகளை மின்னஞ்சலில் அனுப்பிப் பெற்ற பதில்கள் இவை.

*Swadeshi Steam என்ற பெயரில் பெரியதொரு நூலை வெளியிட்டு, வ.உ.சி.யின் வாழ்க்கை சரிதத்தை எழுதிமுடிக்கும் நிலையில் உள்ளீர்கள். 40 ஆண்டுகளை அதற்கு செலவழித்துள்ள நிலையில் வ.உ.சி. உங்கள் மீது ஆளுமையாக என்னென்ன மாற்றங்களைச் செய்துள்ளார்?*

நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக வ.உ.சி.யுடன் வாழ்ந்து வருகிறேன். 14 வயதுச் சிறுவனாகத் தொடங்கிய பயணம் நரைகூடும் வயதுவரை இன்னும் தொடர்கிறது. இன்று நான் என்னவாக இருக்கிறேன் என்பதை இந்தத் தேடலே தீர்மானித்துள்ளது. ஊர் ஊராகச் சுற்றியுள்ளேன். பலதரப்பட்ட மக்களைச் சந்தித்துள்ளேன். நான் பிறந்து வளர்ந்த பின்னணியில் சாத்தியப்படாத அனுபவங்கள் இவை. வ.உ.சி.யை அடியொற்றிச் சென்றிராவிட்டால் நான் வரலாற்றாய்வாளனாக ஆகியிருக்கமாட்டேன் என்பது நிச்சயம். வ.உ.சி.யையும் அவர் வாழ்ந்த காலத்தையும் புரிந்துகொள்ளும் முயற்சியே என்னுடைய அறிவுலக வாழ்க்கையைத் தீர்மானித்துள்ளது. அதன் விளைவாகப் பெற்ற அறிமுகங்களும் பழக்கங்களும் என்னை ஒரு சமூக மாந்தனாக மாற்றியுள்ளன என்று சொல்ல முடியும். வ.உ.சி. நூற்றாண்டு மலருக்காகப் புலவர் த.கோவேந்தனைத்தேடிச் சென்றிராவிட்டால் நான் என்னவாக ஆகியிருப்பேன் என்று சொல்லத் தெரியவில்லை.

வ.உ.சி.யைப் பற்றி இதுவரை எட்டு நூல்களை எழுதியும் பதிப்பித்துமுள்ளேன். Swadeshi Steam அவருடைய சுதேசிக் கப்பல் சாதனையை மையப்படுத்தியது. எஞ்சிய வரலாற்றை இன்னும் இரண்டு தொகுதிகளில் எழுத வேண்டும் என்று திட்டமிட்டுள்ளேன். பார்ப்போம்.

*வ.உ.சி. கொடுஞ்சிறைத் தண்டையிலிருந்து வெளியே வந்தபின்னர், அப்போதைய காங்கிரஸிலிருந்து அவர் அன்னியமாகிவிட்டார் என்பதை உங்கள் நூல் தெரிவிக்கிறது. பெரியாரின் மரியாதையைப் பெற்றவராக வ.உ.சி. இருந்துள்ளார். பெரியாரைப் பாதித்த 'ஞானசூரியன்' நூலை மறுபதிப்பு செய்தபோது அதற்கு முன்னுரை எழுதுவதற்கு வ.உ.சியைத் தேர்ந்தெடுத்திருக்கிறார், பெரியார். மேலும், வ.உ.சி.க்கு இருந்த தொடர்புகளைப் பார்க்கும்போது சுயமரியாதை இயக்கத்தின் ஆரம்பகட்டத்தில் ஈடுபட்டவராகவும் தெரிகிறது. பெரியார் இயக்கம் அவர் மீது என்னவகையான தாக்கம் செலுத்தியது? வ.உ.சி. மீது பெரியார் செலுத்திய தாக்கம் என்ன?*

சிறையிலிருந்து வெளிவந்தபின் வ.உ.சி. அரசியலிலிருந்து ஒதுங்கிவிட்டார் என்பது ஒரு மாயை. வ.உ.சி.யின் புகழை முதற்கட்டத்தில் பரப்பிய ம.பொ.சி. தம் அரசியல் நிலைப்பாடு காரணமாகக் கட்டமைத்த பிம்பம் இது. சிறை வாழ்க்கையின் பின்னான கால்நூற்றாண்டு காலத்தில் வ.உ.சி. சோம்பி இருந்துவிடவில்லை. மிகக் கடுமையான பொருளாதார நெருக்கடியிலும்



அக்காலத்து அனைத்து இயக்கங்களிலும் அவர் பங்குகொண்டிருந்தார். தொழிலாளர் இயக்கம், சமூகச் சீர்திருத்தம், சைவச் சீர்திருத்தம், தமிழ் மறுமலர்ச்சி என அனைத்திலும் அவர் பங்காற்றினார். காங்கிரஸ் கட்சியோடு முரண்பாடு கொண்டிருந்தாலும் நாட்டு விடுதலை இயக்கத்தோடு அவர் தொடர்பு அற்றுப்போகவில்லை.

*1916*இல் பிட்டி தியாகராயரும் டி.எம். நாயரும் பார்ப்பனரல்லாதார் அறிக்கை வெளியிட்டு, நீதிக் கட்சியைத் தொடங்கிய பின்னர் தமிழக அரசியலில் கூர்மைப்பட்ட பார்ப்பனர் - பார்ப்பனரல்லாதார் முரண்பாடு வ.உ.சி.யிடமும் வெளிப்பட்டது. 1920களின் பிற்பகுதியில் அவர் செட்டிநாட்டில் ஆற்றிய உரைகள் முக்கியமானவை. 'ஞானசூரியன்' முன்னுரையை நீங்களே குறிப்பிட்டுவிட்டீர்கள். இரண்டொரு சுயமரியாதைத் திருமணங்களைக்கூட அவர் முன்னின்று நடத்தியிருக்கிறார். பெரியார் சுயமரியாதை இயக்கத்தைத் தொடங்கியதும் சைவர் உலகில் அது பெரும் கலக்கத்தை உண்டு பண்ணியது. அப்போது சைவரிடையே சுயமரியாதை இயக்கத்தின் குரலாக வ.உ.சி. விளங்கியதை எனது 'திராவிட இயக்கமும் வேளாளரும்' என்ற நூலில் பல ஆதாரங்களோடு விளக்கி எழுதியுள்ளேன். இது பற்றி இன்னும் விரிவாக எழுத வேண்டிய தேவையும் உள்ளது, தரவுகளும் உள்ளன.

**வ.உ.சி.யை காந்தி ஏமாற்றினாரா? என்ற உங்கள் கட்டுரை இரு ஆளுமைகளின் உயர்ந்த அம்சத்தை தெரிவிப்பவை. ஆனால், உங்கள் கட்டுரை காட்டும் சமநிலையையும் மீறி காந்தி இவ்வளவு கறாராக் இருந்திருக்க வேண்டாமே என்ற உணர்வு எழுவதைத் தவிர்க்க இயலவில்லை?**

காட்டியிருக்கக் கூடாதுதான். ஆனால், அதை காந்தியிடம் யார் சொல்வது! பதிவதும் புரிந்துகொள்வதும் விளக்குவதுமே வரலாற்றாளனின் பணி. தீர்ப்பு கூறுவதல்ல.

**வாஞ்சியால் சுட்டுக்கொல்லப்பட்ட ஆஷ் துரை சந்திப்பு பற்றிய கட்டுரை, தமிழ்க் கலைக்களஞ்சியம் தொடர்பிலான நூல், சுதேசிக் கப்பல் பற்றிய நூல் என எல்லாவற்றிலும் ஒரு கதைசொல்லும் நேர்த்தியைப் பெற்றிருக்கிறீர்கள். உங்கள் தமிழ், ஆங்கில மொழிக்கான தாக்கத்தைப் பெற்ற புனைவாசிரியர்கள் யார்?**

இலக்கிய வாசிப்பின் வழியாகவே வரலாற்றுக்குள்

நுழைந்தவன் நான். அபுனைவு எழுத்தில் பெரும் ஈடுபாடு கொண்டிருந்தாலும் புனைவெழுத்தையும் தொடர்ந்து வாசிக்கிறேன். புதுமைப்பித்தன் என் மனங்கவர்ந்த நாயகர். பத்தாம் வகுப்பு விடுமுறையில் படித்த அவருடைய கதைகள் என்னைப் புரட்டிப்போட்டன. விந்தன், சுந்தர ராமசாமி, அசோகமித்திரன், ம.இலெ. தங்கப்பா எனப் பல எழுத்தாளர்கள் என்னைப் பாதித்துள்ளனர். ஆங்கில வழியான உலக இலக்கிய வாசிப்பும் உதவியிருக்கிறது. டேவிட் லாட்ஜ் எனக்கு மிகவும் பிடித்த ஆங்கில நாவலாசிரியர். என் தலைமுறையில் மார்க்கேஸ், உம்பெர்தோ ஈக்கோ, ஜான் பெர்ஜர் ஆகியோரைப் படிக்காமல் இருந்திருக்க முடியாது. அபுனைவில் கட்டுரைகளும் வாழ்க்கை வரலாறுகளும் சுயசரிதைகளும் எனக்கு உவப்பானவை. பீட்டர் அக்ராய்டு, ஏ.என். வில்சன் எனக்கு விருப்பமான வாழ்க்கை வரலாற்றாசிரியர்கள். ஸ்டீபன் ஜே கோல்டு என்னை மலைக்க வைத்த கட்டுரையாளர். ஒரு வசதிக்காகப் பயண நூல்கள் என்று சொல்லப்படும் நார்மன் லூயிஸ், ரிச்சர்ட் கப்புசின்ஸ்கியினுடைய படைப்புகள் எனக்கு மிகவும் பிடித்தமானவை.

'லண்டன் ரிவ்யு ஆப் புக்ஸ்' இதழில் வரும் நீண்ட மதிப்புரைக் கட்டுரைகளைப் பல ஆண்டுகளாகப் படித்து வருகிறேன். இ.பி. தாம்சன், எரிக் ஹாப்ஸ்பாம், யூஜின் ஜெனோவீஸ், ஃபெர்டிணாண்ட் பிராடல் போன்ற சிறந்த வரலாற்றாசிரியர்கள் அனைவருமே தேர்ந்த எழுத்தாளர்கள்தான்.

மேலைநாட்டில் உள்ளது போல் வரலாற்றுக்கென்று தனித்த வாசகர் வட்டமும் சந்தையும் தமிழ்ப் பதிப்புலகில் இல்லாததால் வாசகர்களுக்காக நான் இலக்கிய எழுத்தாளர்களுடன் போட்டி போட வேண்டியுள்ளது. சுவையாக எழுத வேண்டிய கட்டாயம் இதனாலும் ஏற்படுகிறது. வரலாற்றுப் புரிதல் என்ற ஒளி தென்பட்டதும் அந்தப் பரவசத்தை என் வாசகர்களுக்குக் கடத்த முற்படுகிறேன். வரலாற்றைப் போன்றதொரு சுவாரசியமான விஷயத்தை எப்படி வரட்டுத்தனமாக எழுத முடியும் என்பதும் எனக்குப் புலப்பட்டதில்லை.

**தமிழில் செம்மையாக எழுதப்பட்ட வாழ்க்கை சரிதங்கள் மிகவும் சொற்பம். புதுமைப்பித்தனுக்கு தொ.மு.சி. ரகுநாதன் எழுதியது, பாலசரஸ்வதிக்கு அவரது மருமகனே எழுதியது என்று சில ஆக்கங்களே ஞாபகத்துக்கு வருகின்றன? பெரியாருக்குக் கூட ஒரு சிறந்த வாழ்க்கை சரிதம் இல்லையே. ஏன்?**

உ.வே.சா. எழுதிய மீனாட்சிசுந்தரம் பிள்ளை, வித்துவான் தியாகராசச் செட்டியார் வரலாறுகளையும் இவற்றோடு சேர்த்துக்கொள்ளுங்கள்.

மனித வாழ்வே அநித்யம்; புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப் பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக் கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் மறுபிறவிகள் உண்டென்று நம்புகிற ஒரு பண்பாட்டில் ஈன 'மனித்தப் பிறவி'க்கு என்ன பெறுமதி இருக்க முடியும்; அதன் வரலாற்றை எழுதுவானேன்? ராமச்சந்திர குஹா கொடுத்த இந்த விளக்கம் தத்துவம் சார்ந்தது.

ஆனால், வாழ்க்கை வரலாறுகள் பெருகுவதற்கான தடைகள் பெரிதும் நடைமுறை சார்ந்தவை. வாழ்க்கை வரலாறு எழுதுவதற்கு நிறைய ஆராய்ச்சி செய்ய வேண்டும். நூலகம், ஆவணக்காப்பகம் என்று அலைய வேண்டும். நேர்காணல், களப்பணி என்று பயணம் செய்ய வேண்டும். இதற்கு நிறைய செலவு பிடிக்கும். மேலும் வரலாற்று நாயகர்களின் நாட்குறிப்புகள், கடிதங்கள் ஆகியவற்றைப் பேணும் வழக்கம் நம்மிடம் இல்லை. வாழ்க்கை வரலாறு எழுதுவது சுலபம் என்றும் பலர் நினைக்கிறார்கள். பிறந்தான், வாழ்ந்தான், செத்தான் என்று வரிசைக்கிரமமாக எழுதிச் செல்வது வாழ்க்கை வரலாறு அல்ல. அது மிகவும் சவாலான ஓர் இலக்கிய வகைமை. இருபது ஆண்டுகளுக்கு முன்பு, பிரபஞ்சனைக் கொண்டு தி. ஜானகிராமன் வாழ்க்கையை எழுதுவிக்க முயன்றோம். ஆனால், எங்கள் எண்ணம் ஈடேறவில்லை.

அதிருக்கட்டும். இவ்வளவு முயற்சிக்குப் பிறகு எழுதும் நூலுக்குச் சந்தை உண்டா? நிறுவன ஆதரவோடு சுந்தா எழுதிய 'பொன்னியின் புதல்வர்' விற்காமல் பல காலம் தேங்கியிருந்ததை நானே கண்கூடாகப் பார்த்திருக்கிறேன். வானதி பதிப்பகம் வெளியிட்ட கல்கி வரலாற்றுக்கே இதுதான் கதி! பழ. அதியமான் கடுமையாக உழைத்து, டாக்டர் வரதராசுலு நாயுடுவின் வரலாற்றை சுவாரசியமாக எழுதினார். 'பெரியாரின் நண்பர்' என்று சுண்டியிழுக்கும் தலைப்பையும் வைத்தார். எவ்வளவு பிரதி விற்றது?

மேலும், நம் நாயகர்களின் தனி வாழ்க்கையைப் பற்றிக் கிசுகிசு பேசுவதற்குத் தயாராக உள்ள சமூகம், முழு உண்மைகளை வெளிப்படையாகப் படிக்கத் தயாராக இல்லை. இந்நிலையில் நல்ல வாழ்க்கை வரலாறுகள் தமிழில் இல்லை என்று புலம்புவதில் என்ன அர்த்தம்? நமக்குத் திருத்தொண்டர் புராணமே போதும்!

**ராமச்சந்திர குஹா போன்ற வரலாற்றாசிரியர்கள் ஆளும் பாஜக அரசின் கடும் விமர்சகர்களாகவும் ஆகியுள்ளனர். உங்களது அரசியல் சார்பு நிலையை வெளிப்படுத்த உங்களது ஆக்கங்களே போதும் என்று முடிவுடன் உள்ளீர்களா? சமகால அரசியலைப் பற்றி நீங்கள் எழுதுவதில்லையே?**

இது அறியாதார் கூற்று. அரசியல் சார்ந்த என் எழுத்துகளைப் பெரிதும் ஆங்கிலத்தில் எழுதியிருக்கிறேன். தமிழ் வாசகர்கள் இதனை

அறியமாட்டார்கள் போலும். ஆனால், இந்தக் குற்றச்சாட்டுக்கு அறியாமை மட்டுமே காரணம் என்று நான் நம்பவில்லை. ‘இந்து’, ’இந்தியா டுடே’, ‘டெலிகிராஃப்’, ‘டைம்ஸ் ஆப் இந்தியா’, ‘அவுட்லுக்’, ‘மிண்ட்’, ‘தி வையர்’, ‘ஸ்கிரோல்’ என்று ஏராளமான முன்னணி இதழ்களில் அரசியல் கட்டுரைகளை எழுதியுள்ளேன்; நேர்காணல்களில் அவதானிப்புகளைச் செய்துள்ளேன். பிரணாய் ராய், ராஜ்தீப் சர்தேசாய், சாகரிகா கோஷ், யோகேந்திர யாதவ் ஆகியோரோடு தேர்தல் நேரத்தில் தொலைக்காட்சியில் தோன்றியுள்ளேன். தமிழக அரசியல் ஆளுமைகள், நிகழ்வுகள் பற்றிய கூர்மையான விமரிசனங்களை Tamil Characters என்ற என் நூலில் காணலாம்.

பெருமாள்முருகன் சர்ச்சையின்போது தமிழ் ஊடகங்களிடம் கண்ணன் பேசுவதென்றும், அனைத்துலக ஊடகங்களிடம் நான் உரையாடுவதென்றும் வேலைப் பிரிவினை செய்துகொண்டோம். பேசிப் பேசித் தொண்டையே வற்றிவிட்டது.

1988 தொடங்கி எண்ணிலடங்காக் கூட்டறிக்கைகளில் கையெழுத்திட்டிருக்கிறேன். ராஜிவ் காந்திக்கு சல்மான் ருஷ்டி எழுதிய பகிரங்கக் கடிதத்தை 1988இலேயே தமிழாக்கி வெளியிட்டவன் நான். ஜல்லிக்கட்டு போராட்டத்தின்போது ‘இந்து’வில் நடுப்பக்கக் கட்டுரை எழுதியிருக்கிறேன்.

‘எகானமிஸ்ட்’,‘நியூயார்க்டைம்ஸ்’,‘ஃபினான்சியல் டைம்ஸ்’ போன்ற சர்வதேச இதழ்களில் மேற்கோள் காட்டப்பட்ட எத்தனை தமிழ் எழுத்தாளர்களை உங்களுக்குத் தெரியும்?

தமிழகத்துக்கு வெளியே தமிழ் சார்ந்த குரல்களுக்கு இடம் இல்லாத சமயத்தில் நான் அந்த வேலையைக் கொஞ்சம் செய்துள்ளேன்.

இருமொழிகளில் எழுத்து, பதிப்பு; நண்பர்களின் எழுத்துப் பணிக்கு உதவுதல் என்பதற்கு இடையில் இதையும் விட்டுவைக்கவில்லை. இப்போது தமிழர்கள் பலர் என்னைவிட மிகச் சிறப்பாக ஆங்கிலத்தில் எழுதி வருகிறார்கள். ஆகவே அண்மைக்காலத்தில் இதைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டுள்ளேன். அவ்வளவே.

தமிழில் பல முக்கிய எழுத்தாளர்கள், ஆய்வாளர்களின் படைப்புகள் வெளியுலகம் அறிந்துகொண்டதில் என் பங்கு உண்டு.

தமிழகச் சூழல் குறித்து அறிந்துகொள்ள விரும்பும் அயல் மாநிலத்தவருக்கும் அயல்நாட்டினருக்கும் செய்திகளையும் பார்வைகளையும் பகிர்ந்துகொள்வதன் முக்கியத்துவம் முகநூல் வீரர்களுக்குத் தெரியாது. கடந்த பத்தாண்டுகளாக பாஜக ஆட்சிக் கட்டிலில் இருக்கும் சூழலில் பெரியார் ஆய்வாளன் என்று அறியப்படுவதன் விளைவுகளையும் அவர்கள் அறியமாட்டார்கள்!

**அச்சுப் பண்பாடு வழியாக தமிழ் நவீனமடைந்த வரலாறுதான் உங்களது ஆய்வுப் பரப்பு. 1980, 90களில் மாறிக்கொண்டிருந்த தமிழ் அச்சுத் தொழில்நுட்பத்தையும் நெருக்கமாக அவதானித்திருக்கிறீர்கள். அதைப் பற்றி ஒரு நூலை எழுதும் எண்ணம் உங்களுக்கு உள்ளதா?**

பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் தமிழும் தமிழகமும் நவீனமானதையொட்டித் தமிழ் பதிப்புலகில் நிகழ்ந்த மாற்றங்களை என்னுடைய நூல்கள் பலவற்றில் பதியவும் பகுப்பாய்வு செய்யவும் முயன்றுள்ளேன். அண்மைக் காலங்களில் தொழிநுட்பம் மிக வேகமாக வளர்ந்து வருகிறது. அச்சுத் தொழில்நுட்பம் கண்டுபிடிக்கப்பட்டபோது ஏற்பட்டதைவிட மிகப் பெரியதொரு அறிவுத்தோற்றவியல் புரட்சி நம் கண்முன் அரங்கேறி வருகிறது. அறிவைத் தேடுவது, திரட்டுவது, பகுப்பாய்வது என அனைத்து நிலைகளிலும் பாரதூரமான மாற்றங்கள் நடந்து வருகின்றன. இவற்றைச் சீர்தூக்கி மதிப்பிட மேலும் காலம் வேண்டும்; வேறு அறிவுத் துறைகளில் பயிற்சியும் வேண்டும். அவை எனக்கில்லை. இருந்தாலும், அச்சுத் தொழில்நுட்பத்தின் வரலாற்றை விரிவாகப் பரிச்சயப்படுத்தி கொண்டவன் என்ற முறையில் என் அவதானிப்புகள் பலவற்றை எழுதியுள்ளேன்; சில நேர்காணல்களில் பகிரவும் செய்துள்ளேன். இவை பெரும்பாலும் ஆங்கிலத்தில் அமைந்துள்ளன.

**தமிழில் நூல்கள் வெளிவருவது சுலபமாகவும் ஜனநாயகப்படுத்தப்பட்டும் உள்ள காலம் இது. ஆனால், உள்ளடக்கம், தரம், அழகியலில் செம்மை அதிகரித்துள்ளதாக நினைக்கிறீர்களா?**

முன்பு இருந்தது பொற்காலம் அல்ல என்பதை முதலில் நினைவூட்டிக்கொண்டு இந்தக் கேள்வியை எதிர்கொள்ள விரும்புகிறேன். அறிவு ஜனநாயகப்பட்டே ஆக வேண்டும். அதே வேளையில் அளவு மாற்றம் பண்பு மாற்றமாகவும் ஆக வேண்டும். அதற்குச் சமூகத்தில் மாற்றம் நிகழ வேண்டும். தமிழ் பயிற்று மொழியாக இல்லாத ஒரு சமூகத்தில் நிகழக்கூடிய மாற்றங்களுக்கு ஒரு எல்லை உண்டுதானே. கல்வியின் தரமும் ஆசிரியர்களின் தகுதியும் குறைந்துகொண்டே வருகின்றன. இருப்பினும் பல இளையோர் எழுத்துத் துறைக்குள் தாமாகக் நுழைந்து சாதித்து வருகின்றனர். பெண்களும் விளிம்பு நிலைச் சமூத்தினரும் தங்கள் அனுபவங்களைப் பகிர்ந்துகொள்கின்றனர். இது ஒரு பெரிய வளம். அடுத்த கட்டத்திற்கு இதை நகர்த்த வேண்டும். ●

ஷங்கர்ராமசுப்ரமணியன்
<shankarashankara@gmail.com>

# பதற்றம்

அரவிந்தன்
ஓவியம்: கிருஷ்ணா அசோக்

“உங்க கிட்ட கொஞ்சம் பேசணும். எப்ப டயம் இருக்கும்னு சொல்லுங்க.”

“என்ன விஷயம்னு சொல்லுங்க, அர்ஜண்டா இருந்தா உடனே பேசலாம்.”

“அர்ஜன்ட் இல்ல. ஆனா, முக்கியமான விஷயம்.”

“முக்கியம்னா... எதப் பற்றி! யாரப் பத்தி?”

“நீங்க கவலப்படுற மாதிரி ஒண்ணும் இல்ல. நீங்க எப்ப ஃப்ரீன்னு சொல்லுங்க.”

“ஆக்சுவல்லி நான் ஃப்ரீயும் இல்ல, ஃப்ரீ இல்லன்னும் இல்ல. என்ன விஷயம்னு ஹின்ட் குடுத்தீங்கன்னா ஈஸியா டிசைட் பண்ணிடலாம்.”

“ஹின்ட் குடுக்க முடிஞ்சா குடுத்துருக்க மாட்டேனா? நான் ஏதோ ஹின்ட் குடுக்கப்போய் நீங்க தேவையில்லாம ஏதாவது இமாஜின் பண்ணிண்டீங்கன்னா ரொம்ப கஷ்டமாயிடும்...”

“அப்படியெல்லாம் இமாஜின் பண்ண மாட்டேங்க. நீங்க என்ன புதிர் போட்டுட்டு சால்வ் பண்ணவா சொல்லப் போறீங்க? பேசணும்னுதானே இருக்கீங்க? அப்பறம் நான் ஏன் இமாஜின் பண்ணிக்கப்போறேன்?”

“சங்கீதா, நீங்க இரிடேட் ஆயிட்டீங்கன்னு நெனைக்கறேன். ஸாரி. என்னோட இன்டென்ஷன புரிஞ்சிக்கங்க. உங்க கிட்ட சொல்லணுங்கறதுல எந்த சந்தேகமும் இல்ல. அதே சமயத்துல தேவையில்லாம உங்கள பயமுறுத்திடக் கூடாதுன்னு பார்க்கறேன்.”

“இரிடேட்லாம் ஆகல சௌம்யா. பயமுறுத்திடக் கூடாதுன்னு நீங்க சொல்றப்பதான் கொஞ்சம் பயம் வருது.”

“ஐயயோ... ப்ளீஸ்... டோன்ட் வொர்ரி சங்கீதா. இது அவ்ளோ பெரிய மேட்டரே இல்ல...”

“முக்கியம்னு சொன்னீங்க?”

“முக்கியம்தான். ஆனா, பெருசா கவலப்படறதுக்கு ஒண்ணுமில்லன்னு சொல்ல வரேன்.”

சங்கீதா சிரித்தாள். “முக்கியம், ஆனா, கவலைப்பட வேண்டாம். கேக்க ஸ்ட்ரேஞ்சா இருக்கு சௌம்யா. பேசாம நீங்க டைரக்டாவே சொல்லியிருக்கலாம்.”



சௌம்யாவும் சிரிக்க முயற்சி செய்தாள். முயற்சி கைகூடவில்லை. “கரெக்டு. சொல்லியிருக்கலாம். ஆனா, கொஞ்சம் டெலிகேட்டான விஷயம். கொஞ்சம் டீடெய்லா சொல்லணும். சரி, இன்னிக்கு சனிக்கிழமதானே, ஈவ்னிங் ரைட்டர்ஸ்



கஃபேல மீட் பண்ணலாமா?"

"சனிக்கிழம ஈவ்னிங் மத்ய கைலாஷ் பக்கம் செம்ம டிராஃபிக்கா இருக்கும். நாளைக்கு கார்த்தால அஷ்டலஷ்மி கோயில்ல மீட் பண்ணலாமா?"

"நல்ல ஐடியா. எத்தன மணிக்கு வரீங்க?"

"எட்டு?"

"ஃபைன். முடிச்சிட்டு அப்படியே எங்கயாவது டிஃபன் சாப்பிடலாம்."

"சண்டேனா நான் ப்ரஞ்ச்தான். ஒரு காஃபி மட்டும் சாப்டுவோம். எட்டு மணிக்கு வரேன்."

"ஓகே. லெட்ஸ் மீட் டுமாரோ. பை."

"பை."

"ஒரு நிமிஷம்..."

"சொல்லுங்க..."

"சந்துரு கிட்ட என்ன மீட் பண்ண வர்ரதா சொல்லாதீங்க..."

"ஏன்? அவருக்குத் தெரிஞ்சா என்ன?"

"காரணத்தோடதான் சொல்றேன். நான் பேசப்போறதே அவர பத்திதான்."

"ஓ!" சங்கீதா சற்று ஆசுவாசமடைந்தாள். ஆனால், சட்டென்று அதிலுள்ள விபரீதமும் உறைத்தது.

"சந்துரு பத்தியா? எனி ப்ராப்ளம்?"

“பாத்தீங்களா? அதுக்குதான் நான் ஹின்ட்டே குடுக்க மாட்டேன்னு சொன்னேன். கவலப்படறா மாதிரி ஒண்ணுமில்ல சங்கீதா. கூல். ஒரு சின்ன விஷயம். ஆனா, முக்கியமான விஷயம். நாளைக்கு வாங்க சொல்றேன்.”

“ஓகே!”

அழைப்பைத் துண்டித்ததும் சங்கீதாவுக்கு நிஜமாகவே எரிச்சல் வந்தது. எதுக்கு இந்த மாதிரி புதிர் போடறா என்று சலித்துக்கொண்டாள். சந்துரு விஷயத்தில் என்ன பிரச்சினையாக இருக்கும்? ஏதாவது அஃபேர், கிஃபேர்னு குண்டு தூக்கி போடப்போறாளா? கவலைப்படற மாதிரி எதுவும் இல்லன்னும் சொல்றாளே. என்னவா இருக்கும்?

இதைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தால் நிம்மதியாக இருக்க முடியாது என்பது சங்கீதாவுக்குப் புரிந்தது. எதுவும் யோசிக்காமல் வேலைகளைக் கவனிக்க வேண்டும் என்று முடிவெடுத்து வேலைகளைத் தொடங்கினாள்.

சந்துரு ஊரில் இல்லை. ராகுல் கல்லூரிக்குப் போயிருக்கிறான். வேலைகளில் ஈடுபடுத்திக்கொண்டாலும் மனதின் ஓரத்தில் சந்துரு விஷயத்தில் என்ன பிரச்சினை என்ற கேள்வி மெலிதாக அரித்துக்கொண்டே இருந்தது.

கோயிலில் அதிகக் கூட்டம் இல்லை. சன்னிதிகளையெல்லாம் சுற்றி வந்த பிறகு காற்றோட்டமாக இருந்த இடத்தில் உட்கார்ந்தார்கள். சௌம்யா படபடப்பாக இருப்பதுபோலப் பட்டது சங்கீதாவுக்கு. பார்த்து ரொம்ப நாளாகிவிட்டது. முன்பைவிட சதை போட்டிருக்கிறாள். சொன்னால் வருத்தப்படுவாள்.

“ரொம்ப டென்ஷனாயிட்டீங்களோ?” என்று பேச்சைத் தொடங்கினாள் சௌம்யா.

“டென்ஷன் இல்ல. என்னவா இருக்கும்னு யோசிச்சிண்ட்ருந்தேன். சந்துருவ பத்தி ஏதோ முக்கியமான விஷயம்னு சொன்னப்பறம் யோசிக்கமா எப்படி இருக்க முடியும் சொல்லுங்க...”

“ரொம்ப கரெக்ட். நான்தான் இடியாட்டிக்கா வாய் விட்டுட்டேன். வெறுனே மீட் பண்ணணும்னு சொல்லியிருக்கணும்.”

“பரவாயில்ல விடுங்க. இப்பவாவது சொல்லுங்க.”

சௌம்யா சிரித்தாள். உடல் பருமன் காரணமாக அவளால் தரையில் இயல்பாக உட்கார முடியவில்லை என்பது தெரிந்தது.

“பக்கத்துல எங்கயாவது ரெஸ்ட்ரண்ட்டுக்குப் போய் வசதியா ஒக்காந்துக்கலாமா?”

“அதெல்லாம் வேண்டாம். இப்ப எங்க போனாலும் கூட்டமா இருக்கும். இங்கயே சௌகரியமாத்தான் இருக்கு.”

“அப்ப சரி. சொல்லுங்க...”

“ம்... அப்றம்...”

சங்கீதா கேள்வியைத் தேக்கி நின்ற பார்வையைச் செலுத்திவிட்டு அமைதியாக இருந்தாள்.

“சந்துருவுக்கு ஏதாவது ப்ராப்ளமா? ஐ மீன், அவர் திடீர்னு எதுலயாவது சிக்கியிருக்காரா?”

பீறிட்டு வந்த எரிச்சலை வெளிக்காட்டிக்கொள்ளாமல் சங்கீதா சிரித்தாள்.

“நீங்கதான் சந்துருவ பத்தி பேசணும்னு சொன்னீங்க. இப்ப நீங்களே சந்துரு எதுலயாவது மாட்டிக்கிட்டாரான்னு கேக்கறீங்க. எனக்கு ஒண்ணுமே புரியல.”

“ம்... இருங்க இருங்க. ஏன் அப்டி கேட்டேன்னு சொல்றேன்...”

காற்றின் விளையாட்டால் முகத்தை மறைத்த முடியை ஒதுக்கிவிட்டு, கண்ணாடியை எடுத்துத் துப்பட்டாவால் துடைத்துப் பிறகு அணிந்துகொண்டு, சங்கீதாவைப் பார்த்துப் புன்னகையை வீசிவிட்டு சௌம்யா பேச ஆரம்பித்தாள்.

“ரீசன்டா நா ஒரு விஷயம் அப்சவ் பண்ணினேன். அது தப்பாகூட இருக்கலாம். சப்ஜக்டிவாகூட இருக்கலாம். ஆனா, எனக்கு பெரிய கவலையா இருக்கு. அதுனாலதான் ஷேர் பண்ணிக்கறேன்...”

சங்கீதா பொறுமையாகக் காத்திருந்தாள். உள்ளுக்குள் படபடப்பு தோன்றுவதைத் தெளிவாக உணர்ந்தாள்.

“சந்துரு ஏதோ டீப்பான ப்ராப்ளத்துல இருக்காருன்னு தோணுது. அவரை நேர்ல பாத்து பேசி பல நாள் ஆகுது. மின்னல்லாம் அடிக்கடி மீட் பண்ணுவோம். இப்ப முடியறதில்ல. ஆனா, என்னோட ப்ராஜக்ட் விஷயமாக அவர் கிட்ட அடிக்கடி பேசறேன். நெறய ஹெல்ப் கேக்கறேன். நடு நடுவுல அவரோட வேலய பத்தி, ஹெல்த்த பத்தியெல்லாம் பேசுவேன். எனக்கு என்ன தோணுதுன்னா அவர் முன்ன மாதிரி இல்ல. ரொம்ப டென்ஷனா இருக்கார். ரொம்ப அவசரப்படறார். பேசி முடிக்கறதுக்குள்ளயே ஒண்ணு அடுத்த விஷயத்துக்குத் தாவிடறார் அல்லது பேசி முடிச்சா மாதிரி போன கட் பண்ணிடறார். என்னதான் அவாய்ட் பண்றாரோ, நாமதான் தொல்ல குடுக்கறமோன்னு யோசிச்சி பாத்தேன். அப்படியும் இல்ல. என்கிட்ட பர்சனலா நல்லாதான் பழகறார். மெசேஜுக்கெல்லாம் ப்ராப்பரா பதில் வருது. ஆனா, பேசும்போது மட்டும் படபடப்பா இருக்கார். முடிக்கறத்துக்கு அவசரப்படறார். எல்லாமே புதுசா இருக்கு. ஏதோ ஒரு டென்ஷன மறச்சிட்டு பேசறா மாதிரி தெரியுது. ஆஃபீஸ்ல வேல ஜாஸ்தியா, ப்ரஷர் ஜாஸ்தியா,

வீட்ல ஏதாவது ப்ராப்ளமா, ஹெல்த் இஷ்யூவா அல்லது வேற ஏதாவது, ஐ மீன், அஃபேர் கிஃபேர்னு எதுலயாவது மாட்டிக்கிட்டாரான்னுல்லாம் டவுட் வருது. பெரிசா ஏதாவது பண நெருக்கடில இருக்காரோ, ரம்மி ஆன்லைன் அந்த மாதிரி எதுலயாவது மாட்டிக்கிட்டாரோ, அல்லது ஆன் லைன் சேட், வீடியோ கால்னு எதாவது எசகுபிசகா சிக்கியிருக்காரோன்னுல்லாம் விபரீதமாக தோணுது. அவ்வளவு அவசரம், அடக்கிவெச்ச எரிச்சல் அவர் கொரல்ல தெரியுது. பேசிக்கிட்டிருக்கும்போதே அவர் அட்டென்ஷன் நழுவிடறதயும் ஃபீல் பண்ணினேன். இது எல்லாமே என் கற்பனையாகூட இருக்கலாம். ஆனா, இத உங்ககிட்ட ஷேர் பண்ணிக்கணும்னு தோணித்து. பின்னால எதாவது பிரச்னையாகி, முதல்லயே அலர்ட் பண்ணியிருக்கக் கூடாதான்னு நீங்க நெனச்சிரக் கூடாது. அதுனாலதான் சொல்றேன்...”

சங்கீதாவின் படபடப்பு தணிந்திருந்தது. குறிப்பாக எந்தப் பிரச்சினையும் இல்லை; ஆனால், பெரிய பிரச்சினைகூட இருக்க வாய்ப்பு இருக்கிறது. இருந்தாலும் அவள் பதற்றம் தணிந்திருந்தது. என்ன விஷயம் என்பது தெரிந்ததால் ஏற்பட்ட ஆசுவாசம் அவளைப் பற்றியது. அதே சமயம் சௌம்யா சொன்ன சாத்தியக்கூறுகள் கவலையை ஏற்படுத்தின.

சந்துருதான் சௌம்யாவை அவளுக்கு அறிமுகப்படுத்தி வைத்தான். அலுவலகத்தின் சமூகப் பொறுப்பு தொடர்பான வேலைகளுக்காகச் சில தன்னார்வ அமைப்புகளுடன் சந்துருவுக்குத் தொடர்பு உண்டு. அப்படித்தான் சௌம்யா அவனுக்குப் பழக்கமானாள். பெரிய புத்திசாலி. நிறையப் படித்தவள். பல விதமான புத்தகங்களைத் தொடர்ந்து படித்துக் கொண்டிருப்பவள். திட்ட அறிக்கைகளையெல்லாம் மிகத் திறமையாக எழுதுவாள். இசை, நடனம் ஆகியவற்றில் ஆர்வம் உண்டு. இதெல்லாம் சேர்ந்து சந்துருவை அவளுக்கு நெருக்கமாக ஆக்கின. ஆனால், அவள் மீது கவர்ச்சி, காதல் எதுவும் அவனுக்கு இல்லை என்பது அவளை அவன் அறிமுகப்படுத்தும்போதே சங்கீதாவுக்குத் தெரிந்துவிட்டது. அவ்வப்போது சௌம்யாவைப் பற்றியும் அவளுடைய அவ்வப்போதைய புராஜக்டுகளைப் பற்றியும் சொல்லுவான். சினிமா, அரசியல் பற்றியெல்லாம் பேசுவதுபோலத்தான் சௌம்யாவைப் பற்றியும் பேசுவான். இப்போது இவள் சந்துருவுக்கு டென்ஷன், படபடப்பு, கவனக்குறைவு என்றெல்லாம் சொல்கிறாள். பணப் பிரச்சினையிலிருந்து கள்ளக் காதல்வரை பல சாத்தியக்கூறுகளையும் சொல்லிவிட்டாள். இதை எப்படி எடுத்துக்கொள்வது என்று சங்கீதாவுக்குப் புரியவில்லை. மெனக்கெட்டுக் கூப்பிட்டுச் சொல்கிறாள் என்றால் அந்த அளவுக்கு ஆழமாகக் கவலை ஏற்பட்டிருக்க வேண்டும். அப்படியானால் பிரச்சினை இருக்கிறதென்றுதான் அர்த்தம். என்ன பிரச்சினையாக இருக்கும், எப்படி அதைக் கண்டுபிடிப்பது?

“என்ன அப்படியே சிலை மாதிரி ஒக்காந்துட்டீங்க? இன்னும் கொஞ்ச நேரம் இப்படி இருந்தீங்கன்னா கோயில்சிலை ஒண்ணுதான் இங்கே இருக்குபோலன்னு நெனச்சிருவாங்க” என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள் சௌம்யா. சங்கீதாவும் பதிலுக்குச் சிரித்துவிட்டு, தலையைக் கோதிக்கொண்டு, கையிலிருந்த பாட்டிலிலிருந்து கொஞ்சம் தண்ணீர் குடித்தாள். உங்களுக்கு வேணுமா என்று சைகையில் கேட்டாள். வேண்டாம் எனக் கையசைத்த சௌம்யா, “ரொம்ப டென்ஷனா இருக்கா?” என்று கேட்டாள்.

டென்ஷன் என்ற வார்த்தையைக் கேட்டதும் சங்கீதாவுக்குச் சுர்ரென்று ஏறியது. அதைக் காட்டிக் கொள்ளாமல், “டென்ஷன்லாம் இல்ல. ஆனா, கொஞ்சம் கவலயா இருக்கு, என்னென்ன ப்ராப்ளம்ஸ் இருக்கும்னு நீங்க சில பாஸிபிலிட்டீஸ் சொன்னீங்கல்ல? அதையெல்லாம் நெனச்சா பகீர்னு இருக்கு. ஆன்லைன் ரம்மி, லவ் அஃபேர், ஆன்லைன் சேட், வீடியோ கால் இதெல்லாம் இப்ப சகஜமாத்தானே இருக்கு” என்றாள்.

“ஐயயோ... நீங்களா அப்டி எதுவும் முடிவெடுத்துராதீங்க. அவரோட டென்ஷன பாக்கறப்ப பெரிசா ஏதோ அவரை கஷ்டப்படுத்துதோன்னுதோணுது. அதவெச்சி அப்படி சொல்லிட்டேன். அத சீரியஸா எடுத்துக்காதீங்க.”

“நானும் பாஸிபிலிட்டின்னுதானே சொன்னேன். தீர்மானம் எதுவும் பண்ணலயே. காரணம் தெரியாதப்ப இப்படியெல்லாம்னே நெனைக்கத் தோணும்?”

“அது சரி. நான் கேக்க வந்தது, நீங்க அவர் கிட்ட ஏதாவது ப்ராப்ளம் இருக்கறதா ஃபீல் பண்றீங்களா? ஏதாவது அன்யூஷுவலா, ஏதாவது பெக்யூலியரா... அவர் டென்ஷனா இருக்கறதா ஃபீல் பண்றீங்களா?”

சங்கீதா உடனே பதில் சொல்லவில்லை. வெயில் ஏறிக்கொண்டிருந்ததில் காலை நேரத்தின் இதம் குறைந்திருந்தது. “வெயில் ஜாஸ்தியாயிடிச்சி. அந்த நெழலுக்குப் போகலாமா?” என்று கேட்டபடி எழுந்துகொண்டாள். உடையிலும் செருப்பிலும் படிந்திருந்த மணலைத் தட்டிக்கொண்டாள். உடையைச் சரிசெய்துகொண்டு நிழலைப் பார்த்து நடக்கத் தொடங்கினாள். அண்மைக் காலங்களில் சந்துரு வீட்டில் எப்படி நடந்துகொள்கிறான், தன்னிடமும் ராகுலிடமும் எப்படிப் பேசுகிறான் என்பதையெல்லாம் நினைத்துப் பார்த்தபடி நடந்தாள். சற்றே சிரமப்பட்டு எழுந்த சௌம்யா அவளைப் பின்தொடர்ந்தாள். டென்ஷன் இருந்தால் அது தனக்கல்லவா முதலில் தெரிந்திருக்க வேண்டும்? இவள் எப்படி அதைக் கண்டுபிடித்தாள்? அதுவும் ஃபோனில் பேசும்போது. ஒருவேளை சந்துரு தன்னிடம் மறைக்கிறானோ. டென்ஷனைக் காட்டிக்கொண்டால் பிரச்சினை தெரிந்துவிடுமே

என்று மறைக்கிறானோ.

இருவரும் நிழலில் அமர்ந்தார்கள். சௌம்யா தண்ணீர் பாட்டிலுக்குக் கை நீட்டினாள். இரண்டு வாய் குடித்துவிட்டு பாட்டிலைக் கீழே வைத்தாள்.

“சொல்லுங்க. உங்களுக்கு ஏதாவது தோணுதா? அவர் அப்நார்மலா பிஹேவ் பண்றாரா?”

“அப்படி எதுவும் இல்ல. ஆனா, வேல ஜாஸ்தி இருக்கு. அலைச்சல் அதிகம். ராத்தூக்கம் குறைவு. மத்தபடி நாமலாத்தான் இருக்கார். போன வாரம் அவர் அஃபிஷியல் டூர் கௌம்பறதுக்கு முன்னாடி படம் போகலாமான்னு அவரே கேட்டுதான் மூணு பேரும் போய்ட்டு வந்தோம். அப்நார்மலா எதுவும் தெரியல...”

“அப்டியா. அப்ப சரி. ஆனா, எனக்கு க்ளியரா டிஃபரன்ஸ் தெரியுது. சந்துரு பழையபடி இல்ல. இவ்வளவு எரிச்சலா, படபடப்பா அவர் பேசி நான் பாத்ததில்ல. அட்டென்ஷன் டிஃபிஷியன்ஸி இருக்கு. சொல்றத சரியா புரிஞ்சிக்க மாட்டேங்கறார். சட்டுனு குரல் உயருது. அப்புறம் ரொம்ப நேரம் அமைதியா இருக்கார். இந்த மாதிரி ஃப்லக்சுவேஷன் சைக்கலாஜிகலா ப்ராப்ளம். என்னோட ஃபீல்டுல இந்த மாதிரி நிறைய ப்ராப்ளம்ஸ் ஃபேஸ் பண்ணியிருக்கேன். உங்ககிட்ட எதையும் காமிச்சுக்கலன்னா அதுக்கு என்ன அர்த்தம்னு புரியல. மேபி, உங்ககிட்ட ரொம்ப கவனமா இருக்கார் போலருக்கு.”

சங்கீதா எதுவும் பதில் சொல்லவில்லை. சௌம்யா இவ்வளவு அழுத்தமாகச் சொல்வதைப் பார்க்கும்போது பயமாக இருந்தது. அவள் சொல்கிறபடி பிரச்சினை இருந்தால் அதை எப்படிக் கண்டுபிடிப்பது? எப்படிச் சமாளிப்பது?

“சந்துரு கிட்ட நேரடியா கேட்றாதீங்க. உங்களுக்குத் தெரிஞ்சு ஏதாவது ப்ராப்ளமா இருக்குமோன்னு நினைச்சேன். உங்களுக்கே தெரியலன்னா நீங்க உஷாரா இருக்கணும். எதையும் காட்டிக்காம அப்சவ் பண்ணுங்க.”

சங்கீதா அதை ஒப்புக்கொள்ளும் விதமாகத் தலையாட்டினாள். உள்ளுக்குள் கவலையும் கோபமும் பெருகின. பெரிதாக ஏதாவது இருக்குமோ என்ற கவலை. தன்னிடம் ஏன் சொல்லவில்லை என்ற கோபம். தனக்கு ஏன் எதுவும் தோன்றவில்லை என்ற வருத்தம். பெண் விவகாரமாக இருக்குமோ என்ற கோபம். ஒருவேளை எதுவுமே இல்லாமல் தேவையில்லாமல் அலட்டிக்கொள்கிறோமோ என்ற சந்தேகம்.

“ரொம்ப கவலப்படாதீங்க சங்கீதா. ரெண்டு மூணு நாள் அப்சவ் பண்ணுங்க. பெரிசா எதுவும் இருக்காது. டோன்ட் வொரி.”

கலவையான உணர்ச்சிகளுடன் புழுங்கிக் கொண்டிருந்த சங்கீதாவுக்கு எரிச்சலாக வந்தது. ‘சொல்றதெயெல்லாம் சொல்லிட்டு டோன்ட் வொரியாமே டோன்ட் வொரி’ என்று நினைத்துக்கொண்டவள் புன்னகையோடு அமைதியாக இருந்தாள்.

“சரி, பாக்கலாம். எங்க வீடு பக்கத்துலதான். நான் நடந்து போய்டுவேன். நீங்க எப்டி...”

“நான் டூவீலர்லதான் வந்துருக்கேன்...”

“அப்ப சரி. பை.”

“பை...”

திரும்பத் திரும்பப் பல விதமான சாத்தியக்கூறுகள் சார்ந்த யோசனைகள் அலைக்கழித்துக் கொண்டிருந்தன. நேரடியாகக் கேட்டுவிடலாம். ஆனால், தன்னிடம் மனம்விட்டுப் பேசாமல் இருப்பவனிடம் தானாக வலியப் போய் ஏன் கேட்க வேண்டும் என்று தோன்றியது. என்ன விஷயம் என்று தெரிந்த பிறகு அதை எப்படிக் கையாள்வது என்று பார்த்துக்கொள்ளலாம் என்று தோன்றியது. சந்துருவுக்குப் பெண் சினேகிதிகள் நிறைய உண்டு என்பது அடிக்கடி நினைவுக்கு வந்து தொந்தரவு செய்தது. சௌம்யாவைப் போல அவனுக்குப் பல தோழிகள். அவர்களில் பலரையும் சங்கீதாவுக்கும் தெரியும். யாரோ ஒருவருடன் ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் ஏடாகூடமாக ஏதாவது ஆகியிருக்கலாமோ என்ற எண்ணத்தை அவளால் தவிர்க்கவே முடியவில்லை. டென்ஷன், அதுவும் பெண் விவகாரத்தால் டென்ஷன் என்றால் விவகாரம் சிக்கலாகிவிட்டது என்று அர்த்தம்.

சங்கீதாவின் எண்ணங்கள் பலதிசைகளிலும் பயணம் செய்தன. ரகசியக் காதல், கர்ப்பம், அதனால் எழும் நெருக்கடி, பணத்தேவை என்று பலவிதமாக மனம் கணக்குப் போட்டது. பெண் விவகாரம் இல்லாமலும் நெருக்கடி உருவாகலாம். வேலை, நண்பர்கள் அல்லது உறவினர்கள் தொடர்பான பண நெருக்கடியாகக்கூட இருக்கலாம். அல்லது ஸ்மார்ட் போனில் சகஜமாக நடக்கும் செக்ஸ் வீடியோ கால் வலையில் விழுந்து மாட்டிக் கொண்டிருக்கலாம். பொறுத்திருந்து பார்க்க வேண்டும். தேவையில்லாமல் கற்பனையை வளர்த்துக்கொண்டால் பிறகு தனக்குத்தான் டென்ஷன் ஏறும் என்று நினைத்துக்கொண்டாள்.

எவ்வளவு முயன்றும் சந்துருவின் பிரச்சினை குறித்த யூகங்களையோ அவை தொடர்பான கவலைகளையோ சங்கீதாவால் குறைத்துக்கொள்ள முடியவில்லை. தன்னையறியாமலேயே பதற்றத்தின் பிடிக்குள் விழுந்துகொண்டிருப்பது அவளுக்குப் புரிய ஆரம்பித்தது. “ஏம்மா தேவையில்லாம எரிஞ்சு எரிஞ்சு விழற” என்று ராகுல் இரண்டு மூன்று முறை கேட்டுவிட்டான். தொலைபேசியில் பேசுபவர்கள், “குரலே சரியில்லையே” என்கிறார்கள். “என்னம்மா, ஒடம்புக்கு சொகமில்லயா. முகமே டல்லா இருக்குது”



என்றார் காய்கறிக் கடைக்காரர். இஸ்திரிபோட எடுத்து வைத்திருந்த துணிகளைத் துவைக்கும் இயந்திரத்தில் நேற்று போட்டுவிட்டாள். “என்ன ஆச்சு ஒனக்கு” என்று சந்துரு விசாரித்தான். குளியலறையில் சூடேற்றியை அணைக்க மறப்பது வழக்கமாகிவிட்டது. இப்படியே போனால் தனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் என்று தோன்றியது. சந்துருவிடமே கேட்டுவிட வேண்டியதுதான் என்று முடிவுசெய்தாள். நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை. ராகுல் தாமதமாகத்தான் எழுவான். காலையிலேயே பேசிவிட வேண்டியதுதான்.

காலையில் காப்பி போட்டுக்கொண்டு உணவு மேசைக்கு வந்தபோது சந்துரு கழிவறைக்குப் போயிருந்தான். ‘காப்பி போடறேன்று தெரியும். கொஞ்ச நேரம் கழிச்சு போக வேண்டியதுதானே’ என்று நினைத்தபடி சந்துருவின் காப்பியை மூடி வைத்துவிட்டுக் காப்பி குடிக்க ஆரம்பித்தாள். கைப்பேசி ஒலித்தது. சந்துருவின் கைப்பேசி. மேசை மீதுதான் இருந்தது. யாரென்று பார்த்தாள். சௌம்யா. எடுக்கலாமா என்று தோன்றியது. வேண்டாம் என்று விட்டுவிட்டாள். மீண்டும் அழைத்தாள். எடுக்கவில்லை. இரண்டு நிமிடங்கள் கழித்து மீண்டும் சௌம்யா அழைத்தாள். எடுக்கவில்லை என்றால் காத்திருக்க வேண்டியதுதானே. ஏன் திரும்பத் திரும்ப அடிக்கிறாள் என்று எரிச்சல் வந்தது. காப்பி குடித்து முடிந்த பிறகு மீண்டும் கைபேசி ஒலித்தது. சௌம்யாதான். சங்கீதாவின் எரிச்சல் அதிகரித்தது. எடுக்கப் போவதற்குள் ஒலி அடங்கியது. அப்போது சந்துரு வெளியே வந்தான்.

“காஃபி குடிச்சிட்டு போக வேண்டியதுதானே. காஃபி போடறேன்னு தெரியும் இல்லயா?”

“அவசரமா வந்தா என்ன பண்றது?” என்று சொன்னபடி காப்பி தம்ளரை எடுத்துக்கொண்டு சூடு பண்ணிக்கொள்வதற்காகச் சமையலறைக்குப் போனான்.

காப்பியைப் பீங்கான் கோப்பையில் ஊற்றி மைக்ரோவேவ் அவனில் வைத்துச் சூடு பண்ணியபடி, “ஃபோன் அடிச்சிட்டே இருந்துதே, யாருன்னு பாத்தியா?” என்றான்.

“சௌம்யா” என்றாள் சங்கீதா.

“ஓகே ஓகே” என்றான் சந்துரு. கையில் கோப்பையுடன் வந்து குடிக்க ஆரம்பித்தான்.

“மூணு நாலு தடவ பண்ணிட்டா.”

“எல்லா ஃபோனுமே அவதானா?”

“ஆமாம்.”

சந்துரு காப்பி குடிக்கும்போது தானாக எந்த அழைப்பையும் தொடங்க மாட்டான் என்பது சங்கீதாவுக்குத் தெரியும். எனவே, அவன் குடித்து முடித்த பிறகு சௌம்யாவிடம் பேசுவதைக் கவனிக்க வேண்டும் என்று காத்திருந்தாள். தேங்காய் எண்ணெய் பாட்டிலை எடுத்து வந்து ஜன்னலைப் பார்த்தபடி அமர்ந்து தலைக்கு எண்ணெய் தேய்த்தபடி சந்துரு என்ன செய்கிறான் என்று கவனித்துக்கொண்டிருந்தாள். சந்துரு காப்பி சாப்பிட்டுவிட்டுத் தன் கைப்பேசியை எடுத்துப் பார்க்க ஆரம்பித்தான். வாட்ஸப் செய்திகளைப் பார்த்துவிட்டு அழைப்பான் என்று நினைத்து சங்கீதா காத்திருந்தாள். சந்துரு சாவகாசமாகக் கைப்பேசியில் எதையோ படித்துக்கொண்டிருந்தான். தலைமுடிக்கு நிதானமாக எண்ணெய் அபிஷேகம் செய்து முடித்த சங்கீதா அதற்குமேல் பொறுக்க முடியாமல், “சௌம்யா அத்தன தடவ கூப்டாளே, திரும்பக் கூப்படலயா?” என்றாள்.

“பேசலாம். என்ன அவசரம்?”

“அவசரம் இல்லாமயா அத்தன தடவ கூப்ட்ருப்பா?”

“அவசரம்லாம் ஒண்ணுமில்ல. நேத்து சாயங்காலம் கூப்டு அரை மணிநேரம் பேசினா. வேலயா இருக்கேன்னு சொல்லக்கூட விடாம காத பொசுக்கிட்டா. ப்ராஜக்ட் விஷயமா அவங்க டீம்ல ஏதோ சண்ட. கான்செப்ட்ல பிரச்னன்றதவிட ஈகோ க்ளாஷ்தான் பெரிசா இருக்கு. இவளும் விட்டுக்கொடுக்க மாட்டா. அதுக்கு எங்கிட்ட பஞ் சாயத்து. மூர்த்தி கிட்ட நான் பேசணுமாம். இப்ப கூப்டா ஒரு மணிநேரம் ஃபோனவைக்க மாட்டா.

சொன்னதயே திருப்பித் திருப்பி சொல்லுவா. நம்மள பதில் சொல்லவே விடமாட்டா. கவலப்படாதீங்கன்னு சொல்லிட்டா போதும். எனக்கென்ன கவல, என் பிரச்னயே வேற. உங்களுக்கு நான் சொல்றதே புரியலன்னு மறுபடி ஆரம்பிப்பா. கொஞ்ச நாளாவே இப்டிதான். சிங்கிளா இருந்தா இந்த மாதிரி பிரச்ன வரும்போல. என்னால இத ஹேண்டில் பண்ண முடியல.”

“வேற எதாவது புதுப் பிரச்னையாகூட இருக்கலாம்ல்ல? பேசிப் பாருங்க. உங்க க்ளோஸ் ஃப்ரெண்டுதானே.”

“க்ளோஸ் ஃப்ரெண்டுதான். அதுக்காக? ஞாயத்துக்கிழம காத்தால வேற வேல இல்லயா? நா ஃபோன வெச்சிட்டு வெளில போயிட்டேன்னு சொல்லி நீ வேண்ணா பேசிப்பாரு. நான் நேர்ல பாக்கும்போது பேசிக்கறேன். இப்ப பேசினா நா டென்ஷனாயிடுவேன்.”

“நா பேசலப்பா, நீயே பேசிக்க.”

“அவளே திரும்ப கூப்டா பாத்துக்கலாம்.”

சங்கீதாவுக்கு ஆசுவாசமாகஇருந்தது. சௌம்யாவின் கற்பனைகளை எண்ணிச் சிரிப்புக்கூட வந்தது. அவளுக்குத்தான் ட்ரீட்மெண்ட் தேவை என்று நினைத்தபடி எண்ணெய் பாட்டிலை வைப்பதற்காக உள்ளே சென்றாள். சந்துரு கைப்பேசியை எடுத்துக்கொண்டு பால்கனிக்குப் போனான்.

சந்துரு தன்னிடம் நடிக்கிறானோ என்ற எண்ணம் சங்கீதாவுக்குச் சட்டென்று வந்தது. சற்று முன் ஏற்பட்ட ஆசுவாசம் மொத்தமாகக் காணாமல் போனது.

**“அரவிந்தன்”** <aravindanmail@gmail.com>

# கல்லாமைகள்

மாலதி மைத்ரி

ஓவியம்: **Robert Colquhoun**





மன்னர் செங்கோல் பரிவாரத்துடன்
புல்டோசரில் புறப்பட்டுவிட்டார்
வெள்ளனே எழுந்து என்ன செய்யனும்
பீய்தெறியும் காற்றை அடக்கி
முற்றத்துக் கூரை தார்பாலீனை
இழுத்துக் கட்டி முகப்பில்
ஒரு கொத்து காகிதப் பூக்கள்
வண்டி வரும் முன்
சட்டிப் பானைகளை மூட்டைப் பிடிப்பதா
பீரோ கட்டில்கள்
பிள்ளைகள் வரைந்த கடலும் சூரியனும்
உதிக்கும் சுவர்கள்
கட்டுமரத் தும்புத் தூண்டி
நடுசாமம் போன கணவன்
பாடு பங்கில் கிடைத்தால்
கெண்டைக்காலளவு கடவிரால் விரும்பிக் கேட்டிருந்தாள்
நெய்வடியும் மண்டை தேனமுதம்
துறைமுகத்தில் நங்கூரமிட்டிருக்கும்
சரக்கு கப்பல்களின் நாராச சங்கொலி
ராட்சச சவப்பெட்டிகள் போல்
முகில் முட்ட அடுக்கியிருப்பவை என்ன
கல் ஆமைகளென குமிந்திருக்கும் கருங்கல் குன்று
அலைக்கரையை பூட்டும் நெடும் மதில்
மருண்டு ஓடும் ஆட்டுக்குட்டி
பிடித்திழுத்து கொஞ்சி பூவரசு கொழுந்தை ஊட்டுகிறாள்
கல்லில் நகம் தெறித்து கசியும் குருதி
குரல்வளையை நெறிப்பது போல்
கட்டைவிரலை அழுத்துகிறாள் கையால்
மலையை உடைத்து ஏன் கடற்கரையில்
ஊரான் கொட்டனும்
காயத்துக்கு கட்டிட்டபடி யோசிக்கிறாள்
மீன் அரியும் மனையின் கருக்கில்
மொய்க்கின்றன ஈக்கள்

உறக்கத்தை கலைத்து விடும்
பிரிட காலோவின் குரங்குகள் அதிகாலையில்
துள்ளிக் குதித்து பிறாண்டுவதைத் தடுக்கனும். ●

**மாலதி மைத்ரி**
<malathimaithri@gmail.com>

# தாகூரும் உளப்பகுப்பாய்வும்

**சஃபி**

*வியன்னாவில் நடுத்தர வர்க்கத்து மனநோயாளிகளை, குறிப்பாக பெண் மனநோயாளிகளை ஆராய்ந்து உருவான ஃப்ராய்டின் சிந்தனைகள், அக்கால இந்தியச் சூழலில் எப்படி எதிர் கொள்ளப்பட்டது?*

வரலாற்றின் விதிகளுக்குள் அடைபடாமல் தனித்தியங்கும்'சுயத்தின்' தன்மை பற்றியும் தன்னைத் தோண்டி ஞானம் அடைதலைப் பற்றி சதா கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் நெடிய இந்திய ஆன்மிக மரபுக்கும், சமூக வரலாற்றுக்குட்பட்டு தனிமனித சிக்கல்கள், பாலியல் வேட்கைகள், நனவிலிக் கனவுகள் என்று தனிமனிதனை ஆராயும் உளப்பகுப்பாய்வுக்கும் இடையே சரியான சகஜமான உரையாடல் நடைபெறவில்லை. இதனை இந்திய சமூக வாழ்வில் முக்கிய ஆளுமைகளாக விளங்கிய அரவிந்தர், ரவிந்திரநாத் தாகூர், கிரிந்தர சேகர் போஸ் போன்றோர்களின் பார்வைகள் வழியாகப் பார்ப்போம்.

பிரிட்டிஷார் நம்மை ஆண்டு கொண்டிருக்கும் போதே கல்கத்தாவுக்கு உளப்பகுப்பாய்வுச் சிந்தனைகள் வந்துவிட்டது. 1922ஆம் ஆண்டே சர்வதேச உளப்பகுப்பாய்வுக் கழகத்தின் அங்கீகாரம் பெற்று, இந்திய உளப்பகுப்பாய்வுக் கழகம், கிரிந்தர சேகர்போஸ் என்ற மருத்துவரினால் ஆரம்பிக்கப்பட்டு செயல்படத் தொடங்கிவிட்டது.

கிரிந்தர சேகர் போஸ் வசதியான உயர்சாதி குடும்பத்தில் பிறந்தவர். அவரது தந்தை பீகார் மகாராஜாவிடம் திவானாக வேலை பார்த்தவர். போஸ் 1910ஆம் ஆண்டிலேயே மருத்துவப் படிப்பை முடித்துவிட்டார். அவருக்கு ஹிப்னாடிசத்திலும் பிறழ்வு நிலை உளவியலிலும் ஆர்வம் அதிகம். கல்கத்தா பல்கலைகழகத்தில் பிறழ்வு நிலை உளவியலை போதித்த முதல் பேராசியிரும் அவர்தான். 1921ஆம் ஆண்டு'தி கான்சப்ட் ஆஃப் ரிப்ரசன்' (The Concept of Repression) என்ற ஆய்வுப் புத்தகத்தை எழுதி அதற்காக இந்தியாவில் உளவியலில் முதலில் டாக்டர் பட்டம் பெற்றவரும் போஸ்தான். தனது ஆய்வுப் புத்தகத்தை ஃப்ராய்டுக்கும் அனுப்பி வைத்தவர் போஸ்.

1921 முதல் 1937 வரை போசுக்கும் ஃப்ராய்டுக்கும் கடிதப் போக்குவரத்து இருந்திருக்கிறது. இருவரும் நேரிடையாகச் சந்தித்துக் கொண்டதில்லை. 1931ஆம் ஆண்டில் ஃப்ராய்டின் எழுபத்தைந்தாவது பிறந்தநாள் விழாவையொட்டி திருவாங்கூர் சிற்பத்தை மாதிரியாகக் கொண்டு தந்தத்தில் வடித்த விஷ்ணு சிலையை ஃப்ராய்டுக்கு பரிசாக அனுப்பி வைத்தார். ஃப்ராய்டும் தனது மேஜையில் தொன்மையான கிரேக்க சிற்பங்களுக்கு மத்தியில் விஷ்ணுக்கும் தகுதியான இடம் கொடுத்து வைத்துக்கொண்டார்.

1953ஆம் ஆண்டில் தான் இறக்கும் தருவாய் வரை கிரிந்தர சேகர் போஸ்தான் இந்திய உளப்பகுப்பாய்வுக் கழகத்தின் பிரசிடென்டாக இருந்தார். பதினைந்து உறுப்பினர்களைக் கொண்டு தோற்றுவிக்கப்பட்ட இந்திய உளப்பகுப்பாய்வு கழக உறுப்பினர்களில் ஒன்பது பேர்கள் கல்லூரியில் தத்துவமும் உளவியலும் போதித்த பேராசிரியர்கள். மற்ற ஐந்து பேர்கள் இந்திய இராணுவத்தில் பணிபுரிந்த மருத்துவர்கள். அதில் ஓவன் பெர்க்லி ஹில், கிளாட் டாங்கர் டாலி ஆகிய இரண்டு பிரிட்டிஷ் இராணுவ அதிகாரிகளும் அடக்கம். மிஞ்சிய ஒருவர் தொழிலதிபர்.



இந்தியக் கலாசாரத்தை ஆதாரமாகக் கொண்டு உருவான ஆய்வுக் கட்டுரைகளை பிரசுரித்துக்கொள்ள 1947ஆம் ஆண்டு 'சமிக்சா' என்ற இதழை தங்களுக்கென்று



ரவிந்திரநாத் தாகூர்

ஆரம்பித்துக்கொண்டனர் கழக உறுப்பினர்கள். ஆனால், அக்காலத்தில் உயர் வகுப்பைச் சார்ந்த அறிவாளிகளிடம் உளப்பகுப்பாய்வு சிந்தனைகள் வரவேற்பைப் பெறவில்லை.

தனது மகன் மேல் இந்தியாவின் எந்தச் சாயலும் படியக்கூடாது; அவன் மனதளவில் ஒரு ஐரோப்பியனாக இருக்க வேண்டும் என்று, நாஸ்திகத் தந்தையினால் இங்கிலாந்திற்கு கல்வி பயில அனுப்பப்பட்டவர் அரவிந்தர். ஆரம்பத்தில் இந்திய தேசியப் போராட்டத்தில் தீவிர நிலை எடுத்தவர். பின்பு ஆன்மிகவாதியாய் மாறிவிட்டார். அவருக்கு உளப்பகுப்பாய்வின் அணுகு முறை உவப்பான விஷயமாய் இருக்கவில்லை. 'இந்த உளப்பகுப்பாய்வு நிபுணர்களை ஏற்றுக்கொள்வது எனக்குச் சிரமமாக இருக்கிறது. அவர்களைத் தீவிரமாக என்னால் கணக்கிலெடுத்துக்கொள்ள இயலவில்லை. அவர்கள் ஆழமான ஆன்மிக அனுபவத்தை மினுங்கி மறையும் விளக்கின் ஒளியைக் கொண்டு ஆராய முற்படுகிறார்கள். இந்தப் புதிய உளவியலானது போதுமானளவு மொழியறிவில்லாது சில சொற்றொடர்களை கற்றுக்கொண்டு பேசிக் கொண்டிருக்கும் குழந்தைகள் போல்தான் எனக்குப் படுகிறது. மேலிருந்து வீசிக் கொண்டிருக்கும் ஒளியை கீழுள்ள தெளிவின்மையால் விளக்கிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு தாமரையின் முக்கியத்துவத்தை அது தோன்றி வளர்ந்த சகதியை அலசி ஆராய்வதின் மூலம் அறிந்துகொள்ள முடியாது. மேலுள்ள பிரகாசத்தினால் எப்போதும் புலர்ந்தவாறிருக்கும் பரிபூர்ண மூலத் தாமரையின் ரகசியத்தை அறிந்துகொள்வதில்தான் அதன் அர்த்தம் இருக்கிறது' என்பதுதான் அரவிந்தர் உளப்பகுப்பாய்வு மேல் வைத்த விமர்சனம்.

வங்காளியான ரவீந்திரநாத் தாகூரும் (1861-1941) ஃப்ராய்டும் (1856-1939) சமகாலத்தவர்கள். இருவரும் ஒருவரைப் பற்றி ஒருவரை அறிந்து வைத்திருந்தனர். இருவருக்கும் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன், ரொமெய்ன் ரோலன்ட், தாமஸ் மன் போன்ற சிந்தனையாளர்கள் பொது நண்பர்களாக இருந்திருக்கின்றனர். 1915ஆம் ஆண்டு அளவிலேயே தாகூருக்கு உளப்பகுப்பாய்வு சிந்தனைகளைப் பற்றி பரிச்சயம் இருந்திருக்கிறது. இருந்தும் அவருக்கு உளப்பகுப்பாய்வின் மேல் ஆரம்பத்தில் நல்ல அபிப்பிராயமில்லை. அதனால் 1920ஆம் ஆண்டு தாகூர் வியன்னாவிலிருந்த போது ஃப்ராய்டைச் சந்திக்கவில்லை. ஆனால், மறுமுறை 1926 அக்டோபர் 25 அன்று தாகூர் தனது ஐரோப்பிய பயணத்தின் போது அவரது நண்பர்கள் எடுத்த முயற்சியினால் வியன்னாவில் ஃஃப்ராய்டை தேநீர் விருந்துக்கு அழைத்திருக்கிறார். ஃப்ராய்டும் அந்த



சிக்மண்ட் ப்ராய்ட்

விருந்தில் கலந்து கொண்டிருக்கிறார்.

'நான் பார்த்தபோது அசதியுடனும் பலவீனமாகவும் காணப்பட்டார். ஆனால், வசீகரமான தோற்றத்தைக் கொண்டிருந்தார். நமது கற்பனையிலுள்ள கடவுளின் தோற்றத்தைப் போலிருந்தது தாகூரின் தோற்றம்' என்று தாகூர் பற்றிய தனது அபிப்பிராயத்தை ஃப்ராய்ட் எழுதியிருக்கிறார். தாகூர் ஃப்ராய்டைப் பற்றி எதுவும் பதிவு பண்ணி வைக்கவில்லை. அந்த ஒரு சந்திப்பிற்குப் பின் இருவரும் எந்தத் தொடர்பையும் வைத்துக்கொள்ளவில்லை.

டாக்டர் சரசி லால் சர்க்கார் என்பவர் தாகூரின் சில கவிதைகளில் தென்பட்ட அம்சங்களை, உபநிஷத்தில் காணப்படும் அனுபூதி அனுபவங்கள் மற்றும் ஃப்ராய்டின் சிந்தனைகளை அடிப்படையாகக் கொண்டு விளக்கி, 1926ஆம் ஆண்டு ஜனவரியில் இந்திய அறிவியல் காங்கிரசின் முன்பு ஓர் ஆய்வுக் கட்டுரையை வாசித்தார். (கிரிந்தர சேகர் போஸோடு சேர்ந்து இந்திய உளப்பகுப்பாய்வு கழகத்தை தோற்றுவித்தவர்களில் இந்த சரசி லாலும் ஒருவர்.) கட்டுரையைப் பற்றி கேள்விப்பட்ட தாகூர் 1927 ஆம் ஆண்டு பின்வருமாறு எதிர்வினை புரிந்தார்.

'சரசிபாபுவின் கவிதை பற்றி மதிப்பீடானது நம்மை உயிர்ப்பான கவிதைக்கு இட்டுச் செல்லாது. நான் ஒரு நண்பரை உடலியல் ரீதியாக மதிப்பிட்டால் உடலியல் செயல்பாடுகள்தான் எனக்குத் தெரியுமேயொழிய அந்த நண்பரை இழந்து விடுவேன். கவிதையானது நமக்கு இன்பத்தைத் தருவதால் சிலாகிக்கப்படுகிறது. நாம் கவிதையை அனுபவிப்பதால்தான் நமக்கு மகிழ்ச்சி கிட்டுகிறது. அதை அலசுவதால் அல்ல. கவிதையானது எல்லாவற்றையும் ஒரே சமயத்தில் உள்ளடக்கியது. அதை பகுக்க முடியாது. ஆற்றின் நீரோட்டத்தை காணும் நாம் அதை நாம் பகுதிகளாகக் காண்பதில்லை. முதலில் அலை வருகிறது, அதைத் தொடர்ந்து நீர், பின்பு ஓட்டம் என்று நாம் சொல்லுவதில்லை. அது எல்லாம் ஒன்றாக ஒரே சமயத்தில் இருக்கிறது. அது போலத்தான் ஓர் இலக்கியப் படைப்பு அதன் முழுமையில்தான் சிறப்பாக பரிமளிக்கிறது. படைப்பை உருவாக்கும் பகுதிகளாலல்ல. எல்லா படைப்புச் செயல்களின் அங்கங்களிலும் இந்த ரகசியம் விரவியிருக்கிறது. ஆனால், அங்கங்களைக் கொண்டு படைப்பை அளவிட்டு விட முடியாது. ஆகவே இலக்கியமானது அதன் முழுமையில்தான் அணுகப்பட வேண்டும்.

உளப்பகுப்பாய்வுக்கு, நடைமுறை பயன்பாடோ அல்லது அறிவார்ந்த மதிப்போ இருக்கலாம். ஆனால், இலக்கியத்தில் செயல்பட அதற்கு இடமில்லை. அதன் கோட்பாடுகள் இலக்கியத்திற்கு பொருத்தமில்லாதது. அதனால் அதை ஏற்றுக்கொள்ள இயலாதது. சில நபர்கள் உளப்பகுப்பாய்வின் கலைச் சொற்களை வைத்துக்கொண்டு பகுக்கமுடியாத படைப்பின் முழுமையை தரந்தாழ்த்தப் பார்க்கிறார்கள்.

உளப்பகுப்பாய்வோடு எனக்குள்ள பிரச்சினையானது பாலியல் இயல்பூக்கத்திற்கு அது தரும் முக்கியத்துவம்தான். என்னைப் பொருத்தவரை, பாலியல் இயல்பூக்கதை விட சுய முனைப்பே முன்னால் வருகிறது. பாலியல் தேட்டங்களை விட சுய முனைப்பே பழமையானது. சுய முனைப்பே நமது வாழ்வோடு பிரிக்க இயலாதவாறு பரவியிருக்கிறது. ஏன் சுய சிந்தனையை பயன்படுத்தி விஷயங்களைப்


கிரிந்தர சேகர் போஸ்

பார்க்கக்கூடாது. ஃப்ராய்ட் சொல்லும் அனைத்தையும் நீங்கள் ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும்? நாம் சுயமாக யோசிப்பதை இழந்துவிட்டோம் என்பதை மறுக்க முடியாது' என்று சரசி லாலைப் பார்த்து தாகூர் எதிர் கேள்வி கேட்டார்.

கடைசியில் உளப்பகுப்பாய்வு ஒரு விஞ்ஞானமா அதற்கு அறிவியல் அந்தஸ்தை கொடுக்க இயலுமா என்ற கேள்வியையும் தாகூர் எழுப்பினார். அதன் தொடர்ச்சியாக, 'உளப்பகுப்பாய்வின் கச்சாப் பொருட்கள் கனவுகளாகும். மற்ற விஞ்ஞானங்களில் பொருட்கள் துல்லியமாக அளக்கப்படுவது போல் கனவுகளையும் பரிசோதனை ரீதியாக அளக்க இயலுமா' என்ற விமர்சனத்தையும் முன் வைத்தார் தாகூர்.

உளப்பகுப்பாய்வின் மீது நேரிடையாகவும் மறைமுகமாகவும் தாகூர் வைத்த விமர்சனத்துக்கு கிரிந்தர சேகர் போசும் 1928ஆண்டு 'பிரபாசி' என்ற இதழில் விரிவாக பதிலளித்தார். 'தாகூர் எழுப்பியுள்ள விமர்சனமானது மேற்கில் பலகாலத்துக்கு முன்பேயே வைக்கப்பட்டதுதான். நேரிடையான நிரூபணங்கள்தான் மட்டும்தான் நிரூபணங்களல்ல. நீதிமன்றத்திலிருக்கும் கைதியானவன் மறைமுகமான சாட்சிகளின் பலத்தினாலும் தூக்கிலிடப்படுகிறான். அதுபோல், விஞ்ஞானத்திலும் அனுமானத்துக்கு இடமுண்டு. நேரிடையான சாட்சிகளுக்குள்ள தகுதியான தன்மைகளை, மறைமுகமான சாட்சிகளும் கொண்டிருந்தால்தான் ஒரு வழக்கறிஞரோ அல்லது விஞ்ஞானியோ அதை ஏற்றுக்கொள்வர். அதுபோல்தான் ஒரு உளப்பகுப்பாய்வாளனின் செயல்பாடும் இருக்கும். நனவிலியைப் பற்றி ஆராய்ந்தவர்கள்தான் அதில் என்ன இருக்கிறது அல்லது அதில் என்ன இல்லை என்று கூற முடியும். உளப்பகுப்பாய்வு தந்திருக்கும் சாட்சிகளை தீர ஆராயாமல் யாரும் அதை நிராகரிப்பதற்கு உரிமையில்லை. ஒரு விஞ்ஞானியானவன், ஒரு சிந்தனை முறையானது மற்றவர்களை காயப்படுத்தும் அல்லது மதநம்பிக்கைக்கு ஊறு விளைவிக்கும் என்ற காரணத்தினால் அச்சிந்தனைகளை நிராகரித்து விட முடியாது. மனிதனின் செயல்பாட்டை பாலியல் இயல்பூக்கமும் சுயமுனைப்பும் தீர்மானிக்கத்தான் செய்கின்றன. நனவிலி மனதில் செயல்படும் பாலியல் முனைப்புதான் ஒரு மனிதனின் செயலை அதிகமும் தீர்மானிக்கின்றன என்பதை உளப்பகுப்பாய்வு கண்டறிந்துள்ளது. நனவிலி மனதை பரிசோதிக்காமலேயே ஒரு நபரின் செயலை எந்தளவு பாலியல் இயல்பூக்கம் அல்லது தன் முனைப்பு தீர்மானிக்கிறது என்று நம்மால் சொல்ல இயலாது.

தாகூரும் சர்க்காரும் நனவு மற்றும் நனவிலி மனதுக்கான வேறுபாட்டை மறந்துவிட்டே பேசியிருக்கிறார்கள். ஆகவே அவர்கள் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்ள முடியாது. கவிஞர்கள், தத்துவவாதிகள் போன்றோர்களின் அபிப்பிராயங்கள் எப்போதும் அறிவியல் பூர்வமாக இருந்துவிடுவதில்லை. செக்ஸ் மட்டுந்தான் ஒரு மனிதனை இயக்குகிறது என்று உளப்பகுப்பாய்வாளன் உரிமை கோரிக்கொள்வதில்லை. அல்லது மனதில் எல்லா இயக்கங்களையும் தான்தான் கண்டறிந்ததாகவும் சொல்லிக்கொள்வதில்லை. கவனத்துக்கு வராத மனதினால் ஒருவன் ஆட்டி வைக்கப்படுகிறான் என்பதை மட்டும் உளப்பகுப்பாய்வாளன் ஆராய்கிறான். மற்றவர்களின் கருத்துக்களைத் தன்மீது பரிசோதனை செய்துகொள்ளாமல் எந்த உளப்பகுப்பாய்வாளரும் அதை அப்படியே ஏற்றுக்கொள்வதில்லை. அப்படிப்பட்டவரை அடிமை புத்தியுள்ளவன் என்று கூறுவது சரியல்ல' என்று கிரிந்தர சேகர் போஸ் எழுதினார்.

ஆனால், 1938-1939ஆம் ஆண்டு வாக்கில் உளப்பகுப்பாய்வின் மீதான எதிர்ப்புணர்ச்சி மட்டுப்பட்டு ஃப்ராய்ட், யூங், ஆட்லர் ஆகியோரின் நூல்களை தாகூர் வாசித்துக் கொண்டிருந்ததாக தாகூரின் படைப்புகளுக்கு எடிட்டராக செயல்பட்ட நந்தகோபால் சென்குப்தா குறிப்பிட்டு இருக்கிறார்.

உளப்பகுப்பாய்வின் பாதிப்பு தாகூரின் 'சோக்கர் பாலி', 'லாபரட்டரி' போன்ற கதைகளில் வெளிப்படையாகவே தெரிகிறது. உளப்பகுப்பாய்வு மீது தாகூருக்கு வந்த மனமாற்றம் தாகூரின் இலக்கியச் செயலாளரும் அவர் பிரியத்துக்குரியவருமான அமியா சக்ரவர்த்தியின் பாதிப்பினால் வந்திருக்கக் கூடும் என கருத இடமிருக்கிறது என, தாகூர் - ஃப்ராய்ட் தொடர்புகளை விரிவாக ஆராய்ந்த சந்தனு பிஸ்வாஸ் என்ற ஆங்கில இலக்கியப் பேராசிரியர் கூறுகிறார். ●

**சஃபி** <safipsy69@gmail.com>

# சுவாமிநாதன் கவிதைகள்

**ஓவியம்: ஞானப்பிரகாசம் ஸ்தபதி**



தனிமை -1

யாருமற்ற பொழுதினில்
படித்துறையில்
அமர்ந்த படி
முத்தமிடும் நீரின்
ராகத்தைக் கேட்டபடி
மௌனித்திருந்தது
தனிமை...

தனிமை -2

காதலர்களின்
இன்ப பரிவர்த்தனைகள்
ஓய்வைக் கழிக்கும்
மகிழ்வு ஒலிகள்
மணல் வெளியெங்கும்
வியாபித்திருக்க
இனியும் உடனிருத்தல்
மனப் பிறழ்வு
என நெட்டித் தள்ளி
எழ முயல்கையில்
அலைகளின் மேலெழுந்து
தழுவ வந்தது
தனிமை...

தனிமை -3

ஆயிரம் கால்களோடு
ஊர்ந்து வரும்
ரயிலைப் போல
குளிர்மையை சுமந்து வரும்
மழையின் தனிமையில்
கிளர்வு கொள்கிறது
பால்யத்தின்
இனிய நினைவுகள்...

தனிமை -4

வெளி யெங்கும்
பரவியபடி தனது
நெடிய கரங்களால்
சூடேற்றும்
உச்சி வெயிலில்
தனித்து வாசம்



கொள்கிறது
மலரத் துடிக்கும்
வயோதிக மலர்…

## கோடை வாசல்

யுகம் யுகமாய்
தன்னைத் தழுவியபடி
நிற்கும் மாயக்
காற்றில்
தனது முதிய
பழுப்பு நிற இதழ்களை
அட்சரமாக்கி
அதன் கரங்களுக்குள்
அளித்தது
பிரிவின் ஒப்புதலை
இலையுதிர்க்கால
விருட்சம்…

மழையின் பாடல்களை
புதைத்திருந்த இலைகள்
இசைக்கத் துவங்கின
கோடைக்கால
முற்ற மெங்கும்…

## வெயில் பெண்

மணலைப் போர்த்தியபடி
மௌனித்து பயணிக்கிறது
கோடை ஆறு
உயிர்த்திருந்து நீரால்
சப்தித்து ஓடியதை
நினைவில் சுமந்தபடி.

சிறு மணல் துகள்களின்
கருவறையில்
தேங்கி நிற்கும்
நீர்த் துளிகளை
தேடி வரும்
மண் மகளின் கரம் பட்டு
சலனமுற்று நிறைகிறது
பானைகளில் ஆறு.
குடத்திற்குள் அசைந்தடி
இலையுதிர்க் கால ராகத்தை
இசைக்கிறது காற்று.
கோடையின் பாடலை
சுமந்தபடி
மணல் ஆற்றில்
தடம் விட்டு செல்கிறாள்
வெயில் பெண்…

## மழை வாசல்

யாருமே தேவையில்லை
பெருக்க
அலங்காரமிட
மழைக் கால முற்றத்தை
தனது நீர்க் கரங்களால்
மலரினைப்
பறித்து
தெறித்து
கோலமிட்டிருந்தது
ஈரமான வாசல் மீது
மழை.

மெல்லிய இதழ்களுக்குள்
உறங்கிக் கிடந்தது
தேன்.
சிறகில்லாத
ஏதுமற்ற
எளிய
ஊர்ந்து வரும்
எறும்புகளுக்காய்
வசந்தத்தின் பாடலை
உறிஞ்சிய படி
மௌனித்திருந்தது
விருட்சம்
மழையின் முற்றத்தில்…. ●

# சாமானியரின் ஆட்சி

## கௌதம் ராஜ்

தமிழ் சமூகம் ஒரு அரசியல் சமூகமாக பரிணமிக்க திராவிட இயக்கத்தின் பங்கு முக்கியமானதாக இருந்துள்ளது. அதன் மூலம்தான், தமிழ் சமூகம், தனது திராவிட-தமிழர் என்ற சுயமரியாதை அடையாளத்தை கொண்ட 'அரசியல் சமூகமாக' (Political Society) இன்றளவும் நிலைநிறுத்தி கொண்டிருக்கிறது. அடங்கி செல்லும் சமூக (Obedient Society) நிலைமைகளில் இருந்து ஆற்றலை வெளிப்படுத்தும் (Achievement Society) சமூகமாக மாற்றமடைந்த ஒரே காரணத்தால் தான், இன்றைக்கு நாம் பொருத்தப்பட்டுள்ள அரசியல் சமூகமாக நம்மை அடையாளப்படுத்தி கொள்கிறோம்.

இயல்பாகவே ஒரு அரசியல் சமூகம் - வேட்கை நிறைந்த சமூகமாகவும் சிவில் சமூகம் படிந்து போகும் சமூகமாகவும் இருக்கிறது. அரசியல்மயப்பட்ட சமூகம், அரசியல் மூலம் பெற்ற தன்னுணர்வால் வேட்கை மிகுந்த சமூகமாக உருமாறுகிறது. இந்த உருமாற்றம் கூட்டு லட்சியமாகவும் தனி மனித அபிலாஷையாகவும் வெளிப்படுகிறது. தமிழ் சமூகம் தன்னை ஒரு கூட்டாக உணர தொடங்கிய போக்கு 1949இல் தொடங்கி 1967இல் அரசியல் தளத்தில் நிறைவை அடைகிறது. அன்றைக்கு உருவாகிய அந்த தமிழ் அரசியல் தளத்திற்குள் (Political Frontire) தான் சமகால அடையாள முரண்கள் (Contestation) எல்லாம் ஒன்றை ஒன்று முட்டி மோதி நிலைநிறுத்தி கொண்டிருக்கிறது.

நிற்க...

18 ஆண்டு (1949-1967) காலத்திற்குள் எப்படி இத்தகைய அரசியல் கூட்டுணர்வு சாத்தியபட்டது என்பதைத்தான் 'Rule of the Commoner' நூல் ஆய்வு செய்கிறது.



'Rule of the Commoner' நூல் குறித்து EPW இதழில் மூன்று கட்டுரைகள் வெளியாகி இருக்கின்றன.

'A Revolution Achieved? - The Latest Study of the Dravidian Movement Follows Its Leaders' (EPW, April 1 2023) என்ற கட்டுரையை ரூபா விஸ்வநாத் (Rupa Viswanath) எழுதி இருந்தார். தலித் விமர்சனத்தை இந்நூல் கருத்தில் கொள்ளவில்லை என்பது ரூபா விஸ்வநாத் விமர்சனத்தின் மைய சாரமாக இருந்தாலும், அவரது விமர்சனத்தில் ஒருவகையான உதாசினம் வெளிப்படுகிறது என்பதையும் குறிப்பிட்டாக வேண்டும்.

தலித் ஆதரவு நிலைப்பாடு சமகால ஆய்வாளர்களுக்கு ஒருவகையான 'விமர்சிக்கும்' உரிமையை அளிக்கிறது. இத்தகைய உரிமையை தலித் தரப்பு ஆய்வாளர்களும் அங்கிகரிக்கிறார்கள். 'பார்ப்பனர் x பார்ப்பனர் அல்லாதார்' அரசியல் விவாதத்தில் இருந்து 'பார்ப்பனர் அல்லாதார் x தலித்' அரசியல் விவாதம் நோக்கி நகர வேண்டும் (இம் முரணையும் பேச)வேண்டும் என்பது அவர்கள் வாதம். இதில் நியாயம் இருக்கிறது என்றாலும் இத்தகைய இருவேறு முரண்பாடுகளை ஒரே தளத்தில் வைத்து ஒப்பிட்டுவிட முடியாது. மேலும் இத்தகைய தலித் விமர்சனத்தை கருத்தில் கொள்ளவில்லை என்ற வாதம், நூலை சரியாக புரிந்துகொள்ளாததால் ஏற்பட்ட ஒன்றாகவே படுகிறது.

இதே நூலில் திராவிட இயக்கம் கட்டமைக்க முயன்ற Counter- Narratives பற்றி குறிப்பிடும்போது: பாரதிதாசன் எழுதிய 'இரணியன்' நாடகம், மணிக்கொடியில் வெளிவந்த புதுமைப்பித்தனின் 'பொன்னகரம்' சிறுகதைக்கு எதிர்வினையாக 'குடிஅரசு' இதழில் சீலன் எழுதிய 'அக்ரஹாரம்' கதை, ராஜாஜி 'கல்கி' இதழில் எழுதிய இராமாயணத்துக்கு எதிராக முரசொலியில் கலைஞர் 'முகஜி' என்ற புனைபெயரில் ஆற்றிய எதிர்வினை போன்ற அனைத்திலும் தலித் சார்பு நிலை விமர்சனமும் அடங்கியே இருந்தது.

ஏற்கனவே, திராவிட இயக்கத்தால் 'கட்டமைக்கப் பட்ட' வரலாற்றை, திருத்தி எழுதுகிறோம் என்று சொல்லி ஆய்வுலகில்



இயங்கும் தலித் ஆய்வாளர்களும் சில முக்கியமான குறிப்புகளை 'மறதியில்' தவிர்த்து விடுகிறார்கள். அன்னை சத்தியவாணி முத்து திமுகவில் இருந்து விலகி தனிக்கட்சி தொடங்கிய நிகழ்வுக்கு கொடுக்கப்படும் அழுத்தம், அவர் மீண்டும் திமுகவில் இணைந்த நிகழ்வுக்கு கொடுக்கப்படுவதில்லை. 1952 தேர்தலில் அம்பேத்கரின் Schedued Caste Federation வேட்பாளர்களை திமுக ஆதரித்த நிகழ்வும் இதை போலவே 'மறதியில்' தவிர்க்கப்படுகிறது.

திமுகவின் செந்தமிழ் மொழிநடையை விமர்சிக்கும் ரூபா, அத்தகைய மொழி நடை 'பொது கூட்ட' மேடைகளில் செய்த 'சாதி நீக்கத்தை' குறிப்பிட தவறுகிறார். கொச்சை தமிழ் என்பது வட்டார சாதி தமிழாக இருந்ததும், திமுக வெகுஜன அரசியல் வெளியில் முன்னிருத்திய செந்தமிழ் மேடை தமிழ் சாதியற்ற உள்ளார்ந்த விழுமியங்களை வெளிப்படுத்தியதையும், இக்கூற்று குறித்த பெர்னார்ட் பேர் (Bernard Bate) ஆய்வையும் ரூபா படிக்கதவறியிருப்பார் என்று நான் கருதவில்லை.

திராவிட - தமிழ் அடையாளம் உருவாவதற்கு முன்பே பல்வேறு தலித் முன்னோடிகள் இருந்ததையும் சாதி ஒழிப்பை அவர்கள் பேசியதையும் ரூபா குறிப்பிடுகிறார். தலித் இயக்க முன்னோடிகள் கொண்டிருந்த திராவிட இயக்க தொடர்பை குறிப்பிடாமல் எழுதப்படும் தலித் வரலாற்று எழுத்துக்கள் ஒரு புறம் பெருகிவரும் காலகட்டத்தில் இக்கூற்று எனக்கு ஆச்சரியமளிக்கவில்லை என்றபோதிலும், திராவிட இயக்கத்திற்கு வெளியில் நடைபெற்ற சாதி எதிர்ப்பு இயக்கங்களை கணக்கில் கொண்டால் அதில் அத்திப்பாக்கம் வேங்கடாசல நாயகர், வள்ளலார், வைகுண்டர், மறைமலை அடிகள் உள்ளிட்டோரும் அடங்குவர் தானே.

இவர்களால் சாத்தியப்படாத 'அரசியல் வெளி' திமுக முன்னெடுத்த 'Ideation- Imagination- Mobilization' அரசியலாக்கத்தால் சாத்தியப்பட்டுள்ளதை தான் Rule of the Commoner. Construction of The People / Formation of the Political என்பதை தவிர்த்து மற்ற புள்ளிகள் அனைத்தையும் தொட்டு பேசி ரூபா இருக்கிறார்.

இந்த நூல் விமர்சனத்திற்கு பதில் அளிக்கும் வகையிலும், எவ்வித தெளிவுமின்றி ரூபா எழுதி இருந்த கட்டுரைக்கு எதிர்வினையாற்றும் விதத்திலும், 'What Transforms? Capital and Democracy in Tamil Nadu' என்ற தலைப்பில் Rule of the Commoner நூல் ஆசிரியர்கள் ராஜன் குறை கிருஷ்ணன், ரவீந்திரன் ஸ்ரீராமசந்திரன், வி.எம்.எஸ். சுபகுணராஜன் மூவரும் ஒரு கட்டுரை எழுதி இருந்தனர். அதன் முடிவு பகுதியை மட்டும் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

> நிலையான தேர்தல் ஜனநாயகத்திற்கும் அரசியல் ரீதியாக வீரியமாக நடைபெறும் தொடர் போட்டிகளுக்கும் பாசிச அணி திரட்டல்களுக்கும் எதிராக இங்கு உருவாகி இருக்கும் அரசியல் என்பதே எங்களை பொறுத்தவை பெரும் சாதனைதான். இதுவே நாங்கள் நூலில் மேற்கொண்ட பகுப்பாய்விற்கு மதிப்பளிக்கிறது.

என்னை பொறுத்தளவில் இதை விட கண்ணியமான எதிர்வினையை யாராலும் எழுதி விட முடியாது.


வி.எம்.எஸ். சுபகுணராஜன், ரவீந்திரன் ஸ்ரீராமசந்திரன், ராஜன்குறை கிருஷ்ணன்




ரூபா விஸ்வநாத் கட்டுரையை மொழிபெயர்த்து வெளியிட்டுள்ள 'நீலம்' இதழ் அதற்கு எதிராக வெளியான இக்கட்டுரையையும் மொழியாக்கம் செய்து வெளியிடும் என்று நம்புவது ஏமாற்றம் அளிக்கும் ஒன்றாக அமையும். என்ற போதிலும், அம்பேத்கரின் 'ஜனநாயக விழுமியங்களை' போற்றும் அவர்கள் இதை வெளியிடுவார்கள் என்று நம்புகிறேன். *(ரூபா விஸ்வநாத் கட்டுரையை தப்பு தப்பாக மொழியாக்கம் செய்து, மொழிபெயர்ப்பாளர் தனது கருத்துக்களை எல்லாம் இடையில் சொருகி இருப்பதை கவனிக்காமல் இருக்கும் அளவிற்கு 'நீலம்' இதழ் ஆசிரியர் குழு கவனக்குறைவாக இருப்பதை எண்ணி வியக்கிறேன்)*

கல்கத்தா பல்கலைக்கழக வரலாற்று துறை பேராசிரியர் ராஜ் சேகர் பாசு (Raj Sekhar Basu), 'Rule of the Commoner' நூலுக்கு ஒரு மதிப்புரை எழுதி இருக்கிறார், 'Contradictions with in the Practices of a People's Party' (EPW, 22 July 202) என்று தலைப்பிடப்பட்ட இக்கட்டுரையின் முடிவு பகுதி சமகால அரசியல் நிலைமைகளோடு இந்நூல் நிறுவும் கூற்றை ஒப்பிடுகிறது. திமுக கட்டமைக்க முயன்ற அரசியலில் 'மக்கள்' என்ற தொகுப்பு, சமகாலத்தில் பார்ப்பனரல்லாதார், ஆதி திராவிட மக்களிடையே நடைபெறும் அரசியல் / கருத்தியல் ரீதியிலான கருத்து வேறுபாடுகளால் முழுமையடையாமல் இருப்பதையும் போதாமைகளை கொண்டிருப்பதையும் ராஜ் சேகர் பாசு சுட்டி காட்டுகிறார். இவ்வாதம் மேலும் சில ஆய்வுகளை வேண்டி நின்றாலும், 'இந்நூல் காலம் கடந்தும் இன்னும் பல ஆய்வாளர்களை, மிக சமீபத்தில் நடைபெற்ற வரலாற்று நிகழ்வை, ஆய்வு செய்ய தூண்டி கொண்டே இருக்கும்' என்கிறார்.

'Rule of the Commoner' நூலை சுற்றி நடைபெறும் இத்தகைய அறிவு தள விவாதங்கள், திராவிட ஆய்வு புலத்தை உசுப்பி எழுப்பும் என்று நம்புகிறேன்.

*(பெங்களூரில் நடைபெற்ற I.N.D.I.A ஆலோசனை கூட்டத்தில் காங்கிரஸ் முன்னாள் தலைவர் சோனியா காந்திக்கு திமுக தலைவர் மு.க. ஸ்டாலின் இந்நூலை அன்பளிப்பாக வழங்கினார் என்பது குறிப்பிடத்தக்கது.)*

Rule of the Commoner: DMK and the Formations of the Political in Tamil Nadu; Author - Rajan Kurai Krishnan, Ravindran Sriramachandran, VMS Subagunarajan; Publisher - Cambridge University Press; Price Rs. 995

கௌதம் ராஜ் <gowthamraj72001@gmail.com>

# தாமரைபாரதி கவிதைகள்



## 1. மூடாக் கண்கள்

இணையை
அழைக்கும் குரலுக்கும்
அன்றழைத்த குரலுக்கும்
நிறைய வித்தியாசமிருந்தது.

கிணற்றின் ஆழத்தில் இருந்து
குழாயொன்றைப் பிடித்தபடி
நீருக்குள் மூழ்காது
தவித்தபடி அலறும்
அந்தப் பூனைக்கு
ஆறுதல் சொல்லியபடியே
இருந்தாள் மகள்

நீள ஏணியொன்றை
இறக்கி மீட்டோம்

குழந்தைக்குத்தலைதுவட்டுவதுபோல
தலை துவட்டி
அனுப்பி வைத்தாள் மகள்

அங்குமிங்கும் பார்த்துப்
பயந்து பயந்து
தவித்தபடி
எங்கள் பார்வையிலிருந்து
மறைந்தந்தப் பூனை

நாட்கள் நான்கான பின்
வந்த துர்நாற்றத்தில்
கிணற்றைப் பார்த்தாள் மனைவி

உப்பிப் பருத்த சடலமாக
கருத்த நாயொன்று மிதக்க
கார்ப்பரேஷனில் இருந்து வந்து
கூடைகட்டி இறக்கி
எடுத்துப் போனார்கள்

ஞாயிறு இராகுவில்
எலுமிச்சை பழமும்
குங்குமமும் கலந்து
பிசைந்து விட்டோம்
கிணற்றுக்கு

கிணற்றின் வாயை
மூடவந்த ஆசாரியோ
மூவாயிரத்தைநூறைக் கேட்டு
மூடிவிட்டுப் போனான்

நாயின் மூடாத கண்களும்
பூனையின் மருண்ட விழிகளும்
இரவுகளில்
மூடாத என் கண்களைப்
பார்த்துக் கொண்டிருக்கின்றன.

## 2., தூரிகை

பன்றி ஒன்றிலிருந்து
பிய்த்தெடுக்கப்பட்ட
உரோமங்கள்தான்
பறவையின் சிறகை
வரைகின்றன. ●

Thamaraibharadhi
<thamaraibharadhi@gmail.com>

# நிர்மலாவின் தந்தை

வேலு இராஜகோபால்
ஓவியம்: ஞானப்பிரகாசம் ஸ்தபதி

அவளுடையதிருமணநாளில்தான்முதன்முதலாக நிர்மலா அக்காவைக் கண்டான். ஊரிலுள்ள கிருஷ்ணன் கோவிலில் நடந்த திருமணத்தை, அவனுடைய அப்பா நடத்தி வைத்தார். அவனுக்கு எட்டு அல்லது ஒன்பது வயதிருக்கும். அப்பாவுக்கு ஒரு அண்ணன் இருந்தார் என்பதே அன்றுதான் அவனுக்குத் தெரியவந்தது. அவருடைய மகளுக்குத் திருமண வயது ஆகிவிட்டது என்பதும் அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவ்வளவு மூத்தவரா பெரியப்பா? ஆனால், அவரை அவன் அன்றுவரை பார்த்ததில்லை. ஏன்? கடைசிவரை பார்த்ததில்லை.

அப்பாவின் அண்ணன் யார்? எங்கே இருக்கிறார்? தன் மகளுடைய திருமணத்திற்கே வராத அளவுக்கு என்ன நடந்தது? என்ற பல கேள்விகள் அவன் மனத்தில் எழுந்துகொண்டே இருந்தன. அது மிக எளிதாக நடந்த திருமணம் என்றாலும், உடனே தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் அவனுக்கு இருந்தபோதும், அந்த வயதில் தந்தையிடம் அப்படியெல்லாம் கேள்வி கேட்கும் அளவு அவனுக்கு சுயம் இருந்ததில்லை.

அன்றாட விஷயங்களைத் தவிர அப்பாவிடம் பேச எதுவும் இருந்ததில்லை. காலையில் ஆறுமணிக்கே அவனையும் எழுப்பிவிட்டு, ஆஸ்பத்திரியில் புதிதாக அப்போதுதான் கட்டப்பட்ட புதிய கட்டிடத்தில் உள்ள மோசைக் போட்ட குளியலறையில் குளிப்பதற்காக, அப்பா அவனைத் தினமும் அழைத்துச் செல்வார். அந்த வயதில் வேண்டா வெறுப்பாக அவருடன் நடந்து செல்வான். ஆனால், தண்ணீரில்லாத அந்த ஊரில் பலர் ஒரு வாளித் தண்ணீரில் குளித்துக் கொண்டிருக்கும் போது, வேகமாகக் கொட்டும் ஷவரில், பூப்பூவாய்த் தெறித்துவிழும் தண்ணீரில் குளிப்பது அவனுக்குப் பேரானந்தமாக இருக்கும். அது அந்த ஊரில் யாருக்கும் கிடைக்காத வரம். அந்த ஆஸ்பத்திரியே 'எங்களுடையது' போல நினைத்துக்கொள்வான். அப்பாவை அருகிலிருந்து பார்ப்பதும் பேசுவதும் அந்த அரைமணி நேரம் மட்டுமே நிகழும். இரவில் அவர் வரும்போது அவன் பெரும்பாலும் தூங்கியிருப்பான் அல்லது தூக்க மயக்கத்தில் இருப்பான். அவருக்கு இன்னொரு வீடு இருந்தது. அங்கேயும் ஐந்து பிள்ளைகள் இருந்தன. அவனுக்குத் அது ஒரு பெரிய விஷயமாகத் தெரியவில்லை.



பிறகு, நிர்மலா அக்கா அவன் நினைவுகளிலிருந்து மறைந்தே போனாள். அவளுடைய கணவர் ராணுவத்தில் பணி புரிந்துவந்தார் என்பது மட்டும் ஞாபகம் இருந்தது. அப்பாவுக்கு ஒரு அண்ணன் இருந்தார் என்பது ஒரு ஆச்சரியமான புதிராக அவன் மனதில் தங்கிவிட்டது.

அவனுடைய அப்பா, அம்மா இருவரையும் சாத்தான்குளத்திலிருந்து ஒட்டப்பிடாரத்துக்கு மாற்றிவிட்டார்கள். அது ஒரு கிராமம். அங்கே ஆஸ்பத்திரியில் ஏழெட்டுப் பேர்தான் வேலை பார்த்தனர். காலையில், தினசரி நோயாளிகள் இருபது முப்பது பேர் வந்தால் அன்று அதிசயம். மாலையில் ஐந்தாறு பேர் வருவது வழக்கம். மாலையில் ஐந்து மணியோடு ஆஸ்பத்திரி முடிந்துவிடும். அதனால் அவனுக்கு அப்பாவுடனும் அம்மாவுடனும் அதிக நேரம் பழக வாய்ப்புக் கிடைத்தது.

ஏதோ ஒரு மழைநாளில், யாரும் வெளியே போகமுடியாமல் முடங்கிக் கிடந்த ஒரு ஞாயிற்றுக்கிழமை, அம்மா மதுரையில் இருக்கும் தன் தம்பியைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். தன் அப்பாவின் பிடியில் மாட்டிக்கொண்டு தன் தம்பி கஷ்டப்படுவதை அவள் விவரித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய அப்பா அவளுக்குச் செய்த கெடுதல்களை சொல்லிக் கலங்கினாள். அவர்கள் யாரையும் அந்த நாள்வரை அவன் கேள்விப்பட்டது கூட இல்லை. முகம் தெரியாத பெயர்கள், மனிதர்கள், அம்மாவுக்குக் கொடுத்த கஷ்டங்களை அவன் மிகவும் உணர்ச்சி ததும்பக் கேட்டான். பெரும்பாலான நேரங்களில் அவனும் அம்மாவும் கண்ணீர் விடும்போது, அம்மா கதைசொல்வது நின்றுவிடும்.

அப்படி ஒரு நாளில், அம்மாவின் வீட்டுக் கதையைக் கேட்டு, கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, பேச்சை மாற்றுவதற்காக, அப்பாவின் அண்ணனைப் பற்றி அம்மா சொன்னார்கள். அம்மாவின் அப்பா,



தம்பி ஆகியோரைப் போலவே முகம் தெரியாமல் போய்விட்ட அவரைப் பற்றிக் கேட்க வேண்டும் என்ற ஆவல் அவனுக்குள் எழுந்தது. அப்பாவைப் பார்த்தான். அப்பாவின் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் இல்லை. "உனக்கு ஒரு அண்ணன் இருந்தாரே, அவர் எங்கே இருக்கிறார்?" என்று கேட்டான்.

அவர் கொஞ்ச நேரம் அமைதியாக இருந்தார். நினைவுகளில் மூழ்கிவிட்டார் என்று நினைத்து அமைதியாக இருந்தான். நினைவுகளை, கடந்த காலத்திலிருந்து வாரி எடுக்கும் போது, நமக்குப் பிடித்த வகையில் அதை மனம் எடுத்துக் கொடுக்கிறது என்று அப்போது அவனுக்குத் தெரியாது.

"அவனா? வணிக வரித்துறையில் வேலை பார்த்தான். அந்தக் காலத்தில் எங்கள் குடும்பத்திலேயே அவன் ஒருவன்தான் எஸ்.எஸ்.எல்.சி. பாஸ் செய்தவன். உடனே வேலை கிடைத்துவிட்டது. கொஞ்சம் சிவப்பாக, ஒல்லியாக, என்னைவிட உயரமாக, அழகாக இருப்பான். ஒரு நாள் எங்கோ காணாமல் போய்விட்டான்" என்று முடித்தார்.

அந்த வயதில் அதற்கு மேல் கேட்கத் தெரியவில்லை. அவருக்கும் அதற்கு மேல் தெரியாது என்று அவன் நம்பியிருக்கலாம்.

அப்போதுதான் அறிமுகமாகியிருந்த, மர்ஃபி டிரான்ஸிஸ்டர் அவன் வீட்டில் இருந்தது. லேட்டஸ்ட் ஃபேஷன். பக்கத்து வீட்டில் பழைய கால ரேடியோ இருந்தது. அதில் ஸ்டேஷனைக் கண்டுபிடித்துப் பாட்டுக் கேட்பதற்குள் போதும் போதுமென்றாகிவிடும். ஆனால், மர்ஃபியில் உடனே பாட ஆரம்பித்துவிடும். ஒருநாள் 'நிலவில் ஒளிவிடும் உன் தங்க நிறம்' என்ற பாடல் ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தது. அதை கேட்டதும் அவனுடைய அப்பா புன்னகைத்தார். அதைக் கஷ்டப்பட்டு அடக்கியும் கொண்டார். அதைக் கவனித்தவன், "எதுக்குப்பா பாட்டைக் கேட்டதும் சிரிக்கிறீங்க?" என்று கேட்டான். அவருக்கு அடக்க முடியாமல் இன்னும் சிரிப்பு வந்தது. அவர் அப்படிப் புன்னகைப்பதும் பெரிதாகச் சிரிப்பதும் அவனுக்குப் புதியதாகஇருந்தது. அம்மாவும் பக்கத்தில் உட்கார்ந்து சிரித்தாள். வேறு ஏதோ கதை இருக்கிறது.

அப்பா மீண்டும் தயங்கித் தயங்கிப் பேசத் தொடங்கினார். வெளியே மழை பொழிந்து கொண்டிருந்தது. "சிகரெட் வாங்கப் போறேன்" என்று அவரால் போக முடியவில்லை. தொடர்ந்து சொன்னார்."அண்ணன் இந்தப் பாட்டை அடிக்கடிப் பாடுவான். அவ பின்னாலே சுத்திக்கிட்டுருந்தான். அவதான் ரொம்ப இவன நெருக்கிற மாதிரி இருந்தது. அப்பவே எனக்குச் சந்தேகமாக இருந்தது. இவனும் இடக்குப் பண்ணிக்கிட்டுருந்தான். அதைப் பற்றி அப்பாவிடம், 'இவன் வார வரத்துச் சரியில்லை' என்று சொல்லியும் இருக்கேன். ஒரு நாள் அவன்ட்டயும் சொன்னேன். 'பாத்து நடந்துக்கோ'

என்று சொன்னேன். பிறகு அப்படியே ஆயிருச்சு. அதான் சிரிச்சேன்” என்றார்.

“அவரு பேரு என்னப்பா?” என்றான்.

“சொக்கலிங்கம். என்னைவிட இரண்டு இன்ச் உயரம். அப்பவே முன் வழுக்கை விழ ஆரம்பிச்சிட்டது”. அப்பாவைவிட உயரமான, ஒல்லியான நெட்டையான உருவத்தைக் கற்பனை செய்துகொண்டான்.

தொடர்ந்து பேசினார்: “பெரிய பெரிய வியாபாரிகள்லாம் வீட்டுக்கு வந்து, ‘தம்பியைப் பாக்கணும்’னு சொல்லுவாங்க. ஏதாவது கொண்டு வருவாங்க. யாரோட பேச்சையும் கேட்க மாட்டான். ‘தம்பி, உங்க அண்ணனாக் கண்டு உதைக்காம இருக்கோம்’ என்று சொல்லிவிட்டுச் செல்வார்கள். ‘கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிப் போ. நாம ஊர்ல இருக்கணும்ல’ என்று நானும் சொல்லிப் பார்த்தேன். ரொம்பக் கறாரா இருப்பான்.”

அப்பாவின் ஆதங்கம் அவனுக்குப் புரிந்தது. பெரியப்பா லஞ்சம் கிடைக்கும் வேலையில் இருந்தார். ஆனால், நேர்மையாக இருந்திருக்கிறார். நல்ல சம்பாத்தியம் பண்ணியிருக்கலாம் என்பது அப்பாவின் ஆதங்கம்.

“இப்ப எங்க இருக்கிறார்ப்பா? அவர் சொல்லாமப் போனதுக்கு அப்புறம் எப்பவாவது பாத்தீங்களா?”

“ஆமாம். கடலூரில் இருக்கான்னு கேள்விப்பட்டு, அங்கே போனேன். ரயில்வே ஸ்டேஷன்ல பாத்துப் பேசிட்டு வந்தேன்.”

“ரயில்வே ஸ்டேஷன்லயா? வீடு இல்லையா?”

“ஏதோ ரூம் எடுத்துத் தங்கியிருந்தான். கடைகளுக்குக் கணக்கு எழுதிக் கொடுத்துப் பிழைச்சிக்கிட்டிருக்கானாம்.”

“எங்கூட வான்னு நீங்க சொல்லலையா? கூட்டிட்டு வர வேண்டியது தானே.”

”இனிமேக் கொண்டு என்னைப் பாக்க வராதே. நான் எப்படியோ பிழைச்சிக்கிடுவேன். கண்டிப்பா வராதே. எனக்கு எந்த பழைய உறவும் வேண்டாம்’ அப்பிடின்னு சொன்னான். நானும் திரும்பி வந்துட்டேன். அதுக்கு மேல ஒண்ணும் செய்யல.”

அவனுக்குள் நிறையக் கேள்விகள் எழுந்தன. ‘இருபது வருடங்கள் கழித்துப் பார்த்தேன்’ என்று அப்பா சொன்னார். அப்பாவுக்கு எப்படித் தன் அண்ணனை நிர்க்கதியாக ஒரு உறவும் இல்லாமல் தவிக்க விட்டுட்டு வர மனம் வந்தது? எப்படி வர முடிந்தது? அப்பாவுக்கு பாசமே கிடையாது. பெரியப்பா அப்பாவைவிட படிப்பில், வேலையில் நல்ல நிலையில் இருந்திருக்கிறார். நேர்மையானவர் என்றெல்லாம் தோன்றியது. ‘அப்பா சரியாக முயற்சி செய்யவில்லை.’

ஒரு தம்பி, நான்கு தங்கைகள், அப்பா, அம்மா, தான் விரும்பி நேசித்த மனைவி, குழந்தை இவற்றையெல்லாம் விட்டுவிட்டு, ஒரு மழைநாளின் இருளில் அந்த மனிதன் ஓடியதற்கு என்ன காரணம்?

பதில்கள் ஒன்றும் எளிதில் கிடைப்பதாக இல்லை. அவன் மனதில் இந்தக் கேள்விகள் அவ்வப்போது குடைந்து கொண்டிருக்கும்.

அவன் இரண்டரை வருடங்கள் வேலையில்லாமல் தவித்து, அலைந்து பம்பாயில் வேலை கிடைத்து, கிடைத்தது போதும் என்று பம்பாய்க்கு ஓடிவிட்டான். ஆனால், அங்கே போனதும் தொடர்பறுந்து போன உறவுகளின் நினைவுகள் மீண்டும் அவ்வப்போது நினைவுக்கு வரும். கடிதங்கள் மட்டுமே தொடர்பாக இருந்த காலம் அது. அப்பா, அம்மா, தங்கையை விட்டு இருப்பது கடினமாகத்தான் இருந்தது. ‘காலமிட்ட கட்டளையை மாற்றுவது எளிதா?’ என்ற வரிகள் ஞாபகம்வரும்.

ஒருமுறை பம்பாயிலிருந்து திரும்ப வரும் வழியில், சென்னை எழும்பூரில் வண்டி ஏற நின்று கொண்டிருந்த போது, எதிர்பாராத குரலில், ”தம்பி, தம்பி” என்று அவனிடம் நேராக வந்து பாசத்துடன், கண்ணீருடன் நின்றது நிர்மலா அக்கா என்று பேச்சிலிருந்து தெரிந்தது. அவளுக்கு வயதாகிவிட்டிருந்தது. ஆனால், துயரமே நிறமாகிப் படிந்த முகம்.

”அம்மாதான் சொன்னார்கள், ‘இன்னைக்கு அவன் சென்னையில ரயிலேறுவான். முடிந்தால் பார்’ என்று. அதான் ஓடி வந்தேன். எனக்கு இருக்கிற ஒரே தம்பி நீதானே! எப்படியும் பாத்துவிடலாம் என்று வந்தேன். அப்படியே முகத்தை வைத்தே கண்டுபிடித்து விட்டேன். அப்பாவின் முகச் சாயல் உன்னிடமும் இருக்கிறது என்று சொல்கிறார்கள். எனக்கும் ஒரு தம்பி இருக்கான். அவன் நல்லா இருக்கான்ங்கிறது தோணும். முந்தியெல்லாம் பாக்கப் போவமான்னு யோசிப்பேன். ஆனால், முடியாது. இப்பச் சென்னையில இருக்கிறதனால உன்னைப் பாத்தே தீரணும்னு வந்தேன்.”

அவரது வீட்டுக்காரரும் சற்றுப் பின்னால் நின்றிருந்தார். அவரைக் காட்டினாள். அவனுக்கு அவர் மீது ஒரு மரியாதை வந்தது. வணக்கம் சொன்னான். அவர் அதிகம் பேசவில்லை. நிர்மலாவையே பார்த்துக் கொண்டிருந்தார்.

“இவுக தான் என்னை ரொம்ப நல்லாப் பாத்துக்கிடுதாக. ரொம்ப ஆறுதல் பாத்துக்கோ. ஆனாலும் என் மனசில இருக்கிற குறை இன்னும் தீரல. அது தீர்ற வரைக்கும் எனக்கு அமைதி கிடையாது.”

கொஞ்ச நேரம் அமைதியாக இருந்துவிட்டுப் பேசினாள்: “நா பிறந்ததுக்கு முன்னாடியே எங்கப்பா என்னை விட்டுப் போய்ட்டாரு. எங்க போனார்ன்னு



இன்னும் தெரியல. நான் சின்னக் குழந்தையா இருக்கும் போது என்னை விட்டுட்டு ஏன் போனாரு? அப்படி என்ன நான் பாவம் செஞ்சேன்? நானும் இத்தனை வருஷமா தேடுதேன். யாருக்கும் அவரைப் பற்றி ஒண்ணும் தெரியல."

சொல்லும் போதே அவள் கண்களிலிருந்து பொலபொல வென்று கண்ணீர் சொரிந்தது. அப்போது அவளுக்கு ஐம்பது வயதிருக்கும். யாரிடமும் அது போன்ற துயரத்தை அதுவரை அவன் கண்டதில்லை. அவனுக்கும் கண்கள் கலங்கின. பெரியப்பாவைத் தேடும் சிறு குழந்தையின் குரல் இன்னும் அவனுக்குள் அவ்வப்போது ஒலித்துக் கொண்டிருக்கும். துயரத்தின் மெல்லிய கோடு அவன் இதயத்தையும் கீறிவிடும். அவள் தேடுவதை நிறுத்தமாட்டாள் என்றே தோன்றியது.

அவனது அப்பாவும் இறந்து ஐந்தாறு வருடங்கள் கடந்துவிட்டிருந்தன. இருந்திருந்தால் கேட்டிருப்பான். கேள்விகளால் துளைத்தெடுத்திருப்பான். ஒரு தகப்பனைத் தேடும் பெண்ணின் துயரத்தின் முன்னால், அப்படி என்ன ஒரு மௌனம்? அதுவரை அப்பா தன்னிடம் பொய் சொன்னதில்லை என்றே நினைத்திருந்தான். அப்போதிருந்த நிலையில் அப்பா அவனிடம் சில உண்மைகளை மறைத்துவிட்டார் என்று தோன்றியது. காலங் கடந்துவிட்ட கேள்விகளுக்கு பதில் கிடையாது. கேள்விகளைச் சரியான நேரத்தில் நம்மால் கேட்க முடிவதில்லை. வாழ்க்கை இப்படித்தான் சிடுக்குகளை அவிழ்க்காமல் போய்விடுகிறது. நமது கோபத்தையோ தாபத்தையோ வெளிப்படுத்த வழியில்லாமல் ஆழ்மனத்தில் அமுக்கி வைத்துவிடுகிறோம். அவனுக்குள்ளும் அந்த உறுத்தல் நிரந்தரமாக இருந்தது. சொந்தக்காரர்கள் ஒருவருக்கும் தெரியாமல் ஒரு மனிதன் வேறொரு ஊரில், எப்படி வாழ முடியும்? அதை அவரது மகளுக்குத் தெரியாமல் எப்படி மறைக்க முடியும்?

நிர்மலாவின் மனதிலும் முகத்திலும் ஐம்பது வருடங்களாகத் தேங்கி உறைந்துவிட்ட துயரத்தின் பாரம் அழுத்திக் கொண்டிருந்தது. அவள் குரல் அழுந்தி, ஓங்கிப் பேசாத மனுஷியாக்கிவிட்டிருந்தது. அன்று அவள் சொன்னாள்: "என் கணவரும் நல்ல மனுஷன். இரண்டு பிள்ளைகளும் நல்லாப் படிச்சு, ஒருத்தன் நல்ல வியாபாரம் பண்றான். இன்னொருத்தன் பெரிய கம்பெனியில வேலை பார்க்கிறான். வேறு எந்தக் குறையும் இல்லை. ஆனால், எங்க அப்பா ஏன் என்னைக் குழந்தையாகத் தவிக்க விட்டுவிட்டுப் போனார்?"

மீண்டும் மீண்டும் அந்தக் குரல் அவனையும் கலங்கடித்தது. அப்பாவைத் தெரியாத பிள்ளைகளின் ஏக்கம் அப்போதுதான் முழுதாக மனதினுள் இறங்கியது. எத்தனை வயதானாலும் தீராத ஏக்கம் அது.

அவனுக்கு இப்படித் தோன்றியது: 'தவியாய்த் தவிக்கும் ஐம்பது வயதுக் குழந்தையை, அவருடைய கணவனும் பிள்ளைகளும் எப்படியெல்லாமோ கவனித்த போதும், அந்த மனம் ஒரே ஒரு மனிதனை, ஒரே ஒரு கேள்விக்கான பதிலைத் தேடுகிறது. அப்பா என்ற இடம் அவ்வளவு முக்கியமானதாகி விடுகிறதா?

'அவனுடைய அப்பா அப்படிச் செய்திருந்தால்? அவனும்ஒருஅப்பாவாகஇப்படிநடந்துகொண்டிருக்க முடியுமா? அப்படி நடந்து கொண்டதற்கு ஒரு மனிதனுக்கு நேர்ந்த அவலம் என்ன? புத்தரைப் போல் சன்னியாசம் வாங்கிக் கொண்டிருந்தாலும் துறவு மனப்பான்மை என்று விட்டுவிடலாம். ஆனால், லௌகிக வாழ்வில் தானே அவரும் இருக்கிறதாகத் தகவல். அரசு வேலையில் நேர்மையாக வாழ்ந்தவன் கடைகளில் கணக்குகள் எழுதிச் சம்பாதிக்க வேண்டிய

அவசியம் என்ன?'

இந்தக் கேள்விகளை தனக்குள் கேட்டுக்கொண்டான். பதில் கிடைக்காது என்றே பட்டது. நிர்மலா, விவரம் தெரிந்த நாளிலிருந்து அனுபவித்துக் கொண்டிருக்கும் துயரத்தை நீக்க ஒருவராலும் ஒன்றும் செய்ய முடியவில்லையா? யாரோ எதையோ மறைக்கிறார்கள். அதை அவனாலும் கண்டுபிடிக்க முடியவில்லை. பல வருடங்களாக இந்தக் கேள்விகள் ஆழ்மனதில் புதைந்திருந்தன.

நிர்மலா அக்காவை மேலும் பத்து வருடங்கள் கழித்து மீண்டும் சந்திக்க நேர்ந்தது. அவளிடம் முன்பெல்லாம் இருந்த மனப்பதட்டம் அப்போது இல்லை. அவள் நிம்மதியாக இருந்தது போலிருந்தது. அவளுக்கு 60 வயதுக்கும் மேல் ஆகிவிட்டது. அந்த முறை அவனை தன் வீட்டுக்குக் கூட்டிச் சென்றாள். அவள் கண்களில் இருந்த துயரத்தில் பாரம் இப்போது குறைந்திருந்தது. ஏதோ தூரத்திலிருந்து பேசுவதுபோல் தன் உணர்ச்சிவசப்படும் இயல்பை விட்டுவிட்டாள் போலிருந்தது.

சாப்பிட்டுவிட்டு, அவன் நாற்காலியில் அமர்ந்து கொண்டிருந்தபோது சொன்னாள்: "எங்கப்பா, அம்மாவை விட்டுவிட்டு, தன்னுடன் வேலை பார்த்த ஒரு வேறு ஜாதிப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டு, எங்களை விட்டுப் போய்விட்டார்."

அவள் குரலில் ஒரு சலிப்பு இருந்தது. இத்தனை காலம் தேடிய அப்பா இப்படிப்பட்டவர் என்று முகத்தில் கேவலச் சுழிப்பும் தெரிந்தது. அப்பா ஏன் என்னிடம் உண்மையைச் சொல்லவில்லை என்பது அவனுக்குப் புரிந்தது. இந்த விஷயத்தில் உண்மையை அவரால் எப்படிச் சொல்ல முடியும்? பெரியப்பா ஓடிப் போய்விட்டதாக சொல்லிக் கதையை முடித்துவிட்டார்கள். நிர்மலாவின் அம்மாவுக்கு அது தெரிந்திருக்க வேண்டும் அல்லது தனக்குத் தெரிந்ததைச் சொன்னால் அவளுக்கும் மகளுக்கும் அது இன்னும் துயரத்தை ஏற்படுத்தும் என்று மகளுக்குத் தெரியாமல் மறைத்திருக்க வேண்டும்.

அவளுக்கு எப்படித் தெரிந்தது என்று கேட்டான். அவள் தன் கிராமத்துக்குச் சென்றிருந்த போது, அவள் தினமும் அழுதுகொண்டே நாளைக் கழித்திருக்கிறாள். ஒரு நாள் அவள் தொடர்ந்து மிக அதிகமாக அழுது புரண்டு தேம்புவதைக் கேட்டுக்கொண்டு அவளுக்கு ஆறுதல் சொல்ல வந்த பக்கத்து வீட்டுக்காரர், இத்தனை வருடங்களாக அவள் படும் துயரத்தை, அவலத்தைப் பொறுக்க இயலாமல், அவளுடைய அப்பா அவர்களுக்குச் செய்த துரோகத்தைச் சொல்லிவிட்டார்.

அப்படித் துரோகம் செய்தவரை நினைத்து அவள் ஏன் இத்தனை வருடங்களாக அழுதிருக்க வேண்டும்? அதுதான் இந்தக் கதையின் இறுதிக் கட்டம். துரோகத்தை மன்னிப்பது எளிதல்ல. வைரத்தைத் தேடிப்போய் கடைசியில் எலும்புக் கூடு கிடைத்தது போல அவள் உணர்ந்திருக்க வேண்டும். அவள் மனம் அமைதியானது. ஆனால், துயரத்தின் வண்ணம் இன்னும் இருண்டுவிட்டது. அவனுக்குக் கொஞ்சம் நிம்மதியாக இருந்தது. ஒருவழியாக கடைசியில் உண்மையைக் கண்டு பிடித்துவிட்டாள். அது ஒரு வகையில் ஆறுதல்.

ஆனால், அந்த நாளுக்குப் பிறகும் அவனுக்குள் இருந்த கேள்விகள் தூங்க விடாமல் செய்தன. இன்னொரு பெண்ணுக்காக அவர் துரோகம் இழைத்தது உண்மையென்றால், அந்தத் துயரத்தை நிர்மலாவிடம் யாரும் இத்தனை வருடங்களாக ஏன் சொல்லவில்லை? நிர்மலாவின் தந்தை வீட்டை விட்டு ஓடிப்போன சம்பவம் நிகழ்ந்த போது இருந்தவர் அல்லது பார்த்தவர் ஒருவராவது இந்தப் பெண்ணின் அழுகுரலைக் கேட்டு இரங்காதது ஏன்?

அந்த ஊரிலேயே பிறந்து வளர்ந்த நிர்மலாவின் கணவருக்குத் தெரியாமல் இருக்குமா? அல்லது அவரது வீட்டாருக்குத் தெரியாமல் போய்விடுமா? அவளிடம் உண்மையைச் சொன்னது கூட அவருடைய வீட்டுக்காரர்களாக இருக்குமோ?

அவளுடைய அம்மா அதைச் சொல்லாமல் விட்டது ஏன்? பெரியப்பா மீது குற்றம் என்றால் அவள் தைரியமாகச் சொல்லியிருப்பாளே! அவளிடம் ஏதோ மறைக்க வேண்டியது இருந்ததோ? அவள் அவரைத் தேடிப்போய்ச் சண்டை போட்டிருக்கலாமே? ஏன் செய்யவில்லை? அவனால் யூகிக்கத்தான் முடிந்தது. விளக்கின் கீழிருக்கும் இருட்டுப் போல நிர்மலாவின் அம்மா மீது மட்டும் வெளிச்சம் படவில்லை. தாய்மையின் ரகசியம்.

அவன் தன்னுடைய சந்தேகத்தை அவளிடம் பகிர்ந்து கொள்ளவில்லை. அவளைச் சந்திக்கும் வாய்ப்பு பல வருடங்களுக்கு ஒரு முறைதான் நிகழும். இருந்தாலும், இப்போதெல்லாம் அவன் நிர்மலா அக்காவைச் சந்திக்க விரும்பவில்லை. 'தனக்கு ஏற்பட்ட சந்தேகத்தை அவளுக்குக் குறிப்பாகக் கூடச் சொல்லிவிடுவேன்' என்ற பயம்.

தான் நினைத்திருப்பவர், தனது தந்தை இல்லை என்று அவள் சந்தேகப்படுவதைவிட, அவர் துரோகி என்று வெறுப்பது நல்லது. முடிந்துவிட்ட கதையை முதலிலிருந்து தொடங்க அவன் விரும்பவில்லை. ●

**வேலு இராஜகோபால்**
<vrajagopal59@gmail.com>

# இந்திராகாந்தி அலங்காரம் கவிதைகள்

1
என்
மனம்
உன்
கழுத்தைக் கட்டிக் கொள்ள
சிணுங்கிய கணத்தில்
உறைந்து நிற்கிறது
வினாடி முள்.

2
சொற்கள்
சவங்களாகிப் போன
மௌன வெளியில்
கை கோர்த்து
நடந்தோம் நாம்
நம்மைத் தேடி
கிடைத்த தென்னவோ
உனக்கு நீயும்
எனக்கு நானுந்தான்

3
உன்
கண்ணாடி கவசத்தை
கீறாது விளக்க எண்ணி
விழுங்கிய சொற்கள்
தொண்டையில் திரண்டது
செம்மண் புற்றாய்
கரையான்கள் குடியேறின
பாம்புகளும் குடியேறின
காற்று மழை
மின்னல் பனி
வெயில் என
கரையான்கள் ஈசல்களாகும்
ஒரு நாள்
பாம்புகளும் படமெடுக்கும்.

4
நாம் சேர்ந்து
பட்டாம்பூச்சி
பிடித்ததின் நினைவாய்
வண்ணம் படிந்த
விரல் ரேகையோடு
கை குலுக்குவோம்
என்று தான் வந்தேன்
குளவியாக மாறி
நீ
விட்டுச் சென்ற
கொடுக்கில்
கடுத்து கொண்டிருக்கிறது
உன் நினைவு.

5
கூட்டுப்புழுவை
கொதிநீரில்
போட்டு
பட்டு நூலெடுக்கலாம்
என்கிறாய்
நீ

கூண்டைவிட்டு
அண்ட வெளியில்
சிறகடிக்கட்டும்
என்கிறேன்
நான். ●

# அதிகாரத்தின் கதை

**பாவண்ணன்**

சர்வதேச பண்பாட்டு மையம் என்றொரு அமைப்பு தொம்லூரில் இயங்கி வருகிறது. ஒவ்வொரு வாரமும் சனி அல்லது ஞாயிறு அன்று நாடகம், திரைப்படம், ஓவியம், நடனம், உலக இலக்கியம் தொடர்பாக ஏதாவது ஒரு நிகழ்ச்சி நடைபெறும். கலையார்வம் கொண்டவர்களுக்கு அது ஒரு நல்விருந்து. அந்த மையம் நிகழ்த்தும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் செல்லவேண்டும் என எனக்குள் ஆவல் இருந்தாலும், எதிர்பாராமல் நேரும் நெருக்கடிகள் காரணமாக என்னால் ஒருசில நிகழ்ச்சிகளுக்கு மட்டுமே செல்ல முடிந்தது.

கர்நாடகத்தில்இணை சினிமா இயக்கத்தின் தொடக்கப் புள்ளியாக 1970இல் வெளிவந்து, ஒரு திருப்புமுனையாக அமைந்த, 'சம்ஸ்கார' கன்னடப் படத்தை அந்த அமைப்பு திரையிடப்போவதாககடந்த மாதம் ஓர் அறிவிப்பை வெளியிட்டிருந்தது. அதைப் படித்ததுமே, அந்த வாய்ப்பைத் தவறவிடக்கூடாது என முடிவுசெய்துவிட்டேன்.

நான் அந்தப் படத்தை முதன்முதலாக 1980இல் புதுச்சேரியில் பார்த்தேன். அப்போது அந்த மொழியே எனக்குத் தெரியாது. திரையின் கீழே நகரும் ஆங்கில உரையாடல்களைப் படித்து புரிந்துகொண்டேன். 'புதுச்சேரி நவதர்ஷன் திரைப்படக் கழகம்' என்னும் அமைப்பு அதை திரையிட்டது. அதற்குப் பிறகு வெவ்வேறு காலகட்டங்களில் இரண்டு முறை பார்ததுவிட்டேன். எனக்கு மிகவும் பிடித்த படம்.

'சம்ஸ்கார' என்னும் சொல்லுக்கு இரு பொருள்கள். பண்பாடு என்பது ஒன்று, இறுதிச் சடங்கு என்பது இன்னொன்று. சடங்குகள் மீது கொண்ட பற்றுகள் வழியாகவே இம்மண்ணில் பண்பாடு நிலைத்திருக்கிறது என்று நம்புகிறவர்கள் உலகெங்கும் உண்டு. எதிர்பாராத விதமாக ஓர் இறுதிச் சடங்கைச் செய்யமுடியாத நிலையில் அந்தக் கூட்டம் தவிக்கிறது. அந்தப் பிரச்சினைக்கு எப்படி ஒரு தீர்வு கிடைக்கிறது என்பதுதான் திரைப்படத்தின் கதை. அதன் ஊடே கடந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்த மண்ணையே ஆட்டிப் படைத்த பிளேக் என்னும் பெருந்தொற்று நோயால் கிராமம் பாதிக்கப்படுவதும் முன்வைக்கப்படுகிறது. மக்கள் கொத்துக்கொத்தாக விழுந்து சாகிறார்கள். ஒருபுறம் நம்பிக்கை எனும் தொற்றுநோய், இன்னொரு புறம் உயிரைப் பறிக்கும் உண்மையான தொற்றுநோய். இரு இழைகளும் பின்னிப் பிணைந்து பல காட்சிகள் வழியே முன்னால் நகர்கிறது கதை. திரைப்படத்தின் காட்சி மொழி அந்த நகர்வைப் புரிந்துகொள்ள உறுதுணையாக இருக்கிறது.



திரைப்படம் பார்த்ததற்கு மறுநாள் நான் நண்பர் விட்டல்ராவ் அவர்களைச் சந்தித்துப் பேசுவதற்காகச் சென்றிருந்தேன். ஏற்கனவே திரைப்படம் பார்க்கச் செல்வதாக அவரிடம் தெரிவித்திருந்ததால், இயல்பாகவே எங்கள் உரையாடல் 'சம்ஸ்காரா' தொடர்புடையதாகவே அமைந்துவிட்டது.

"அந்தக் காலத்துல 'சம்ஸ்காரா' படத்துக்கு சென்சார் போர்ட் சர்டிபிகேட் கெடைக்கலை. தரமுடியாதுனு சொல்லிட்டாங்க. அதனுடைய உள்ளடக்கம் பற்றி தெரிஞ்சிகிட்ட பிறகு கர்நாடகத்துலயும் அரசல்புரசலா ஒரு சின்ன எதிர்ப்பு இருந்தது. பிறகு டில்லி வரைக்கும் போய் அப்பீல் செஞ்சி போராடியதுக்குப் பிறகுதான் எப்படியோ சென்சார் கிளியரன்ஸ் கெடைச்சிது. அதுக்கப்புறம்தான் படம் ரிலீசாயிடுச்சி."

"அப்பவே இந்த மாதிரி சென்சார் பிரச்சினைகள் இருந்ததா?"

"அந்த மாதிரியான சென்சார் பிரச்சினைகள் என்னைக்கும் இருக்கும். அதை யாரும் மாத்தமுடியது. இதுக்கு நடுவுலதான் நல்ல படங்களை எடுக்க வேண்டியிருக்குது. பார்க்கவும் வேண்டியிருக்குது."

"அந்தக் காலத்துல இந்தப் படத்துக்கு வரவேற்பு எப்படி இருந்தது சார்?"

"இந்தியா முழுக்க இந்தப் படத்துக்கு நல்ல வரவேற்பு கிடைச்சது. படக்குழுவினர் எல்லாருக்கும் நல்ல பேரும் கவனமும் உருவாச்சி. எல்லாப் பத்திரிகைகளும் பாராட்டி விமர்சனம் எழுதியிருந்தாங்க. அந்த வருஷத்துல தேசிய அளவுல சிறந்த படத்துக்கான விருது சம்ஸ்காராவுக்குத்தான் கெடைச்சிது."

"நீங்க அந்தப் படத்தை எங்க பார்த்திங்க?"



சம்ஸ்காரா

"சொல்றேன். அது ஒரு பெரிய கதை. வழக்கமா கன்னடப் படங்கள் போடறதுக்குன்னு ரெண்டு மூனு தியேட்டர்கள் உண்டு. ஆனா, 'சம்ஸ்காரா' அங்க வரலை. படத்துக்கு ஒரு எதிர்ப்புப் பிரச்சாரம் இருந்ததால எல்லாருக்கும் ஒரு சின்ன பயம் இருந்தது. அதனால தியேட்டர்ல ரிலீஸ் ஆகலை."

"வேற எப்படி பார்த்திங்க?"

"அப்ப தமிழ்நாட்டுல கலைஞர் முதலமைச்சரா இருந்தாரு. டைரக்டரும் வேற சிலரும் கலைஞரைச் சந்திச்சி விவரத்தைச் சொன்னாங்க. படத்துடைய மையக்கருவை சுருக்கமா அவருகிட்ட சொன்னாங்க. அவரு உடனே அரசாங்கத்துக்குச் சொந்தமான கலைவாணர் அரங்கத்துல போட்டுக்குங்கன்னு அனுமதி கொடுத்துட்டாரு."

"சரி."

"அதுமட்டுமில்ல, படம்பார்க்க அவரும் வந்துட்டாரு. அப்ப என்னுடைய நண்பர் தனுஷ்கோடி மெட்ராஸ் ஆர்ட் க்ளப்ல பெரிய பொறுப்புல இருந்தாரு. அவருகிட்டதான் என்னை மாதிரி பத்து இளைய ஓவியர்கள் ஓவியம் போட்டு பழகிட்டிருந்தோம். அப்பப்ப கண்காட்சிகள் வைப்போம். எங்க கண்காட்சிக்கு கிரீஷ் கார்னாட் வருவாரு. எல்லா ஓவியங்களையும் பார்த்துட்டு, அதைப் பத்தி ஆங்கிலத்துல விமர்சனக் கட்டுரை எழுதுவாரு. எங்களுக்குள்ள நல்ல அறிமுகம் இருந்தது. மெட்ராஸ் ப்ளேயர்ஸ் க்ரூப்ல அவரும் தனுஷ்கோடியும் ஒன்னா நடிச்சிட்டிருந்தாங்க. எங்க க்ளப் மேல அவருக்கு ஒரு மதிப்பு இருந்தது. 'சம்ஸ்காரா' படம் போட்ட அன்னைக்கு கை நிறைய பாஸ் கொண்டுவந்து எங்ககிட்ட குடுத்துட்டு எல்லாரும் அவசியமா வந்து பார்க்கணும்னு சொல்லிட்டு போயிட்டார்."

“எல்லாரும்னா யார் யாரு?”

‘எல்லாருமே ஓவியக் கலைஞர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள்.”

“படத்தைப் பத்தி எல்லாரும் என்ன நினைச்சாங்க?”

“எல்லாருக்குமே ரொம்ப ரொம்ப புடிச்சிருந்தது. இப்படி என்னென்னைக்கும் பார்க்கிற மாதிரி எடுக்கிற படங்கள்தான் வரலாற்றுல நிக்கும். கன்னட திரைப்பட வரலாற்றுல இந்தப் படம் ஒரு பெரிய திருப்புமுனை. துருதிருஷ்டவசமா அன்னைக்கு அந்த இணைசினிமா இயக்கத்துல இருந்தவங்க எல்லாரும் அடுத்து அடுத்து மறைஞ்சிட்டாங்க. அரை நூற்றாண்டு கடந்தும் அந்தப் படம் பேசக்கூடிய படமா இருக்கறத பார்க்க அவுங்க யாரும் இல்லை.”

அப்போது வாசலில் யாரோ நின்று கதவைத் தட்டும் ஓசை கேட்டது. “ஒரு நிமிஷம் இந்த பேப்பர பார்த்துட்டே இருங்க. இதோ வந்துடறேன்” என்றபடி விட்டல்ராவ் எழுந்து வெளியே சென்றார். குடிநீர்க் குழாய் மீட்டர் ரீடிங் எடுப்பவர் வந்திருந்தார். அவர்கள் வாசலில் நின்று பேசும் சத்தம் கேட்டது.

செய்தித்தாளை எடுப்பதற்காக நான் இருக்கையிலிருந்து எழுந்து மேசையின் பக்கம் சென்றேன். பத்திரிகையை எடுக்கும்போது, அதற்குக் கீழே நீளமான நான்கைந்து நோட்டுகள் இருந்தன. எல்லாமே அழகாக அட்டை போடப்பட்ட நோட்டுகள். அதன் மீது மிகச்சிறிய அளவில் கிறுக்கப்பட்ட கோட்டோவியமொன்று தெரிந்தது. அதைப் பார்க்கும் ஆவலில் அந்த நோட்டை எடுத்தேன். அங்கங்கே குறுக்கும் நெடுக்குமாக இழுக்கப்பட்ட ஏழெட்டு கோடுகளிடையில் ஓர் உருவம் கூடி வந்திருப்பதையே சில கணங்கள் உற்றுப் பார்த்தேன்.

ஒருவேளை அந்த நோட்டுப் புத்தகமே ஓவியங்களுக்கானதோ என்னும் எண்ணத்தால், அதை ஆவலோடு அவசரமாகப் பிரித்தேன். அட்டையில் இருப்பதுபோலவே முதல் பக்கத்தில் மட்டும் சின்னஞ் சிறிய ஒரு கோட்டோவியம் இருந்தது. அதற்கப்புறம் இரு தாள்களில் எதுவும் இல்லை. ஏமாற்றத்துடன் தள்ளினேன். அதற்கு அடுத்த பக்கத்தில் ஒரு பழைய செய்தித்தாள் நறுக்கு ஒட்டப்பட்டிருந்தது. அந்தச் செய்திக்கு நடுவில் சார்லி சாப்ளின் படம் இருந்ததால், அது என்ன என்று தெரிந்துகொள்ளும் ஆவல் இயற்கையாகவே என் நெஞ்சில் எழுந்தது. சார்லி சாப்ளின் மறைவு பற்றிய செய்தியும் அவரைப் பற்றிய சுருக்கமான வரலாறும் அந்தச் செய்தி நறுக்கில் இருந்தன. அதற்குக் கீழே இந்து, 26.12.1977 என்றொரு குறிப்பும் காணப்பட்டது.

ஆர்வத்தின் காரணமாக அந்த நோட்டின் பிற பக்கங்களையும் அவரசரமாகப் புரட்டி ஒவ்வொரு தலைப்புச்செய்தியாக படித்துக்கொண்டே சென்றேன். அவ்வப்போது உலகெங்கும் வசிக்கும் எழுத்தாளர்கள், ஓவியக் கலைஞர்கள், நடனக் கலைஞர்கள், இசை மேதைகள், பத்திரிகை ஆசிரியர்கள், திரைப்பட நடிகர்கள், உலகத் தலைவர்கள் என அனைவரும் இறந்ததையொட்டி இந்து ஆங்கில நாளேட்டில் வெளிவந்த செய்திக் குறிப்புகளையெல்லாம் அழகாக வெட்டி ஒட்டி வைத்திருந்தார். சிறிய அளவிலான தகவல் களஞ்சியம் என்றே அந்தத் தொகுப்பைச் சொல்லவேண்டும்.

“என்ன பார்த்துட்டிருக்கீங்க?” என்றபடி அறைக்குத் திரும்பிவந்து நாற்காலியில் உட்கார்ந்தார் விட்டல்ராவ். மீட்டர் ரீடிங்காரரிடமிருந்து வாங்கி வந்த பில் காப்பியை, இழுப்பறையிலிருந்து சின்னதொரு டைரியை எடுத்து, அதற்குள் பாதுகாப்பாக வைத்துவிட்டு திரும்பினார்.

“என்சைக்கிளோப்பீடியா மாதிரி இந்த நோட்டுகளை அழகா வச்சிருக்கீங்க சார். பார்க்கவே அருமையா இருக்குது. எப்படி சார் இந்த ஐடியா வந்தது?” என்று ஆவலோடு கேட்டேன். அவர் முகத்தை ஒரு கணமும் நோட்டுப் புத்தகத்தை இன்னொரு கணமுமாகதிருப்பித்திருப்பிப் பார்த்தபடி இருந்தேன்.

“திடீர்னு ஒருநாள் இப்படி செய்யலாமேன்னு தோணிச்சி பாவண்ணன். என்னமோ அன்னைக்கு நல்ல நேரம். ஓய்வாதான் இருந்தேன். உடனே அந்த மாசத்து பேப்பர்களையெல்லாம் எடுத்து வச்சிகிட்டு, இது மாதிரியான செய்திகளை மட்டும் கத்தரிச்சி தனியா வச்சிகிட்டேன். புகழ்பெற்ற கலைஞர்கள், எழுத்தாளர்கள், தலைவர்கள், அறிவியலாளர்கள் மாதிரியானவங்க இறந்துபோகும் சமயத்துல ‘இந்து’ பத்திரிகையில இப்படி நல்ல நல்ல குறிப்புகள் வெளியிடுவாங்க. அவுங்கள பத்தி விரிவான கட்டுரைகள், அந்த வார இறுதியிலோ அல்லது அந்த மாத இறுதியிலோ வெளியிடுவாங்க. அது வேறு. இறந்ததுமே வெளியிடக்கூடிய தகவல்கள் சுருக்கமாவும் அந்த ஆளுமையைப் பத்தி புரிஞ்சிக்கக் கூடியதாகவும் இருக்கும். ஏதோ ஒரு வேகத்துல தொடங்கனதுதான் இந்தத் திட்டம். இன்னைய தேதி வரைக்கும் அதை செஞ்சிகிட்டே இருக்கேன். எதிர்காலத்துல இது உதவுமா, யாரு இதையெல்லாம் பயன்படுத்துவாங்கங்கற விஷயங்களைப் பத்தியெல்லாம் நான் யோசிக்கவே இல்லை. திடீர்னு ஒரு கட்டுரை எழுதிட்டிருக்கும்போது சில சமயங்கள்ல எனக்கே ஒரு தகவல் தேவைப்படும்னு வச்சிக்குங்க. அப்ப இதை எடுத்துப் பார்த்தா போதும், எல்லாம் புரிஞ்சிடும்.”

ஒரு புதுமுயற்சியின் தொடக்கத்துக்குப் பின்னணி விசையாக உள்ள அம்சங்கள் ஆளுக்கு ஆள் மாறுபடுவது இயற்கை. விட்டல்ராவின் முயற்சியின் பின்னணியில் இருந்த எண்ணங்களைக் கேட்க மகிழ்ச்சியாக இருந்தது.



மூன்றாவது ரிச்சர்ட்

நான் ஒவ்வொரு நோட்டுப் புத்தகமாக எடுத்துப் பிரித்து ஒவ்வொரு பக்கத்திலும் உள்ள தலைப்புச் செய்தியையும் புகைப்படத்தையும் மட்டும் பார்த்தபடி புரட்டினேன். திடீரென இறந்த காலத்தின் ஊடே ஒரு குறும்பயணம் செய்துவிட்டுத் திரும்பியதுபோல இருந்தது.

ஒரு நோட்டுப் புத்தகம் மற்ற புத்தகங்களைக் காட்டிலும் வித்தியாசமாக இருந்ததைப் பார்த்தேன். அதில் மறைவுச் செய்திகள் எதுவும் இல்லை. மாறாக, புதுமை சார்ந்த தகவல்களும் வரலாற்று நிகழ்ச்சிகள் சார்ந்த தகவல்களும் கொண்ட செய்தி நறுக்குகள் வெட்டி ஒட்டப்பட்டிருந்தன. அந்த மாதிரி நாலைந்து நோட்டுகள் இருந்தன.

“இது என்ன சார்? புதுமையா இருக்குதே” என்று ஆச்சரியத்தோடு கேட்டேன்.

“ஒவ்வொரு தகவலிலும் ஒரு கதை இருக்குது பாவண்ணன். எழுதுற ஆட்களுக்கு ஒவ்வொரு சம்பவமும் ஒரு தங்கக் கட்டி மாதிரி. எல்லாமே அரிய செய்திகள். நம்ம தினசரி வாழ்க்கையில பார்க்கக் கிடைக்காது. இந்த மாதிரியான தகவல்கள் வெளியாகிற அன்னைக்குத்தான் அது செய்திகள். மத்தபடி கொஞ்ச காலம் போயிட்டா, ஒவ்வொன்னும் வரலாறாகிடும்.”

“எப்படி சார் சொல்றீங்க?”

விட்டல்ராவ் என்னிடமிருந்து ஒரு நோட்டுப் புத்தகத்தை வாங்கி ஒவ்வொரு பக்கமாக வேகவேகமாகப் புரட்டினார். அவர் தேடிய பக்கம் கிடைத்ததும் ஆட்காட்டி விரலால் அப்பக்கத்தின் மீது ஒரு தட்டு தட்டியபடி, “இதோ, இந்தச் செய்தியைப் படிச்சிப் பாருங்க” என்று அந்த நோட்டுப் புத்தகத்தை என்னிடம் நீட்டினார்.

நோட்டுப் புத்தகத்தை வாங்கி, அவர் விரலால் அடையாளம்செய்துகாட்டிய பக்கத்தை ஆர்வத்துடன் படித்தேன். இங்கிலாந்தில் லெய்செஸ்டர் என்னும் இடத்தில் ஒரு கழிவு நீர்க் கால்வாயைச் சுத்தம் செய்தபோது கிடைத்த ஒரு சவப்பெட்டியைப் பற்றிய செய்தி அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. அந்தச் செய்திக் குறிப்பு ஆர்வமூட்டுவதாக இருந்தது.

“என்ன சார் இது? அந்த நாட்டுலயும் ஆள அடிச்சி கால்வாய்ல வீசிட்டு போற பழக்கம் இருக்குதுபோல. அது சரி, தூக்கி வீசிட்டு போற ஆளு அப்படியே தூக்கி வீசிட்டு போயிருக்கலாம். வேலை மெனக்கிட்டு ஒரு சவப்பெட்டியில வச்சி எதுக்கு தூக்கிப் போடணும்? விசித்திரமா இருக்குது சார்” என்றபடி நான் விட்டல்ராவ் முகத்தைப் பார்த்தேன்.

“இதுக்குப் பின்னால ஒரு வரலாறே இருக்குது பாவண்ணன். அதனாலதான் இந்தச் செய்தியை தனியா எடுத்து ஒட்டி வச்சிருக்கேன். இது ஒரு தொடக்கப் புள்ளி.”

“என்ன சார் இது? துப்பறியும் கதை மாதிரி இருக்குது. முழுசா சொல்லுங்க சார்” என்றேன். என்னால் ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

அந்த நோட்டுப் புத்தகத்தில் வெவ்வேறு இடங்களில் ஒட்டப்பட்டிருந்த செய்தி நறுக்குகளை ஒவ்வொன்றாகத் தேடிக் காட்டிப் படிக்கச் சொன்னார்.

“அதையெல்லாம் நான் அப்புறமா படிக்கறேன் சார். நீங்க எல்லாத்தயும் கோர்த்து சொல்லுங்க. கேக்கறதுக்கு அதுதான் விறுவிறுப்பா இருக்கும்.”

“அப்படியா, சரி” என்றபடி விட்டல்ராவ் ஒருமுறை தலையை அசைத்துக்கொண்டார். பிறகு தொண்டையைச் செருமி சரிப்படுத்திக்கொண்டு சொல்லத் தொடங்கினார்.

“கழிவுநீர்க்கால்வாய்க்குக்கீழ இந்த சவப்பெட்டியைக் கண்டுபிடிச்சதுதான் முதல் நிகழ்ச்சி. யாருடைய குடும்பத்தைச் சேர்ந்த பெட்டியா இருக்கும்னு கண்டுபிடிக்கறது ஒரு பெரிய சவாலா இருந்தது. நகராட்சி நிர்வாகம் அந்தப் பெட்டியை அந்த வட்டாரத்தைச் சேர்ந்த வரலாற்றுத்துறை சார்ந்த ஆட்கள்கிட்ட ஒப்படைச்சிட்டு ஒதுங்கிடுச்சி. வரலாற்றுத்துறை அந்தப் பெட்டியை வச்சிகிட்டு துருவித்துருவி ஆராய்ச்சி செஞ்சாங்க. தோராயமா ஐநூறு வருஷங்களுக்கு முந்தைய காலத்துப் பெட்டிங்கறத மட்டும் அவுங்க கண்டுபிடிச்சாங்க. அதுதான் முதல் கண்டுபிடிப்பு.”

“அப்புறம்?”

“பெட்டியைப் புடிச்சி திறக்கறதுக்கும் மூடறதுக்கும் வசதியா ஒரு கைப்பிடி இருக்குமில்லையா? அந்த மாதிரி ஒரு உலோகக் கைப்பிடி அந்தப் பெட்டியில இருக்குது. வழக்கமா இப்ப கிடைக்கிற பித்தளைக்

கைப்பிடி, இரும்புக் கைப்பிடி மாதிரியான பிடியா, அந்தக் கைப்பிடி இல்லை. வேறு ஏதோ ஒரு உலோகம். அதுக்கு ஒரு தனி ஆராய்ச்சி நடந்தது. அந்த உலோகமும் ஐநூறு வருஷங்களுக்கு முன்னால அந்த வட்டாரத்து மக்களால் பயன்படுத்தப்பட்ட ஒரு பிரத்யேகமான உலோகம்னு கண்டுபிடிச்சாங்க."

கேட்கக்கேட்க உண்மையாகவே ஒரு துப்பறியும் கதையைக் கேட்பதுபோல சுவாரசியமாக இருந்தது. எதார்த்தம் என்பது புனைவைவிட பல மடங்கு சுவாரசியமானது என்று நினைத்துக்கொண்டேன்.

"அடுத்து என்ன செஞ்சாங்க சார்?"

"அந்த உலோகத்து மேல அரசாங்க இலச்சினை மாதிரி ஒரு சின்ன அடையாளம் இருந்தது. அதை வச்சி அடுத்த ஆராய்ச்சி நடத்துனாங்க. அது யாரோ ஒரு அரச குடும்பத்து அடையாளம்ங்கறது அந்த ஆராய்ச்சியின் முடிவு. அதே சமயத்துல அரச வம்சத்தைச் சேர்ந்த ஒருத்தருடைய சவப்பெட்டி, தேவாலயக் கல்லறையில இல்லாம இப்படி ஒரு பொது இடத்துக்கு ஏன் வந்ததுங்கற கேள்வி எல்லாருக்கும் குழம்ப வச்சிது. அதனால மறுபடியும் ஆராய்ச்சில இறங்கினாங்க."

"அதனுடைய முடிவு?"

"நீண்ட ஆராய்ச்சிக்குப் பிறகு அந்த இலச்சினை ப்ளாண்டஜெனண்ட் வம்சத்தைச் சேர்ந்தவங்க பயன்படுத்திய இலச்சினையா இருக்கலாம்னு அறிவிச்சாங்க."

"கிட்டத்தட்ட உண்மையை நெருங்கிட்டாங்கன்னு சொல்லுங்க. அப்புறம்?"

"அந்தக் கட்டத்துல வரலாற்றுத்துறை இது எங்களால மட்டும் செய்யக்கூடிய ஆராய்ச்சி கிடையாது, மானுடவியல்துறை அறிஞர்களும் சேர்ந்து செஞ் சாதான் கண்டுபிடிக்கமுடியும்னு சொல்லிட்டாங்க. அரசாங்கம் உடனே மானுடவியல் துறை ஆட்களையும் அந்த ஆராய்ச்சியில இறக்கி விட்டுட்டாங்க."

"அவுங்களுடைய கண்டுபிடிப்பு எந்த அளவுக்கு பயனுள்ளதா இருந்தது?"

"முதல் காரியமா அவுங்க பெட்டிக்குள்ள இருந்த எலும்புக்கூட்டை வெளியே எடுத்தாங்க. மக்கியும் மக்காததுமா இருந்த அந்த மிச்சசொச்ச எலும்புகளை வச்சி ரொம்ப ஆழமா ஆராய்ச்சி செஞ்சாங்க. டி.என்.ஏ. டெஸ்ட், அந்த டெஸ்ட், இந்த டெஸ்ட்னு ஏராளமான டெஸ்ட்டுகள் எடுத்தாங்க. அந்த எலும்புக்கூட்டுடைய தலையில ஆழமான ஒரு வெட்டு இருந்தது. தொடை எலும்புகளிலும் கை எலும்புகளிலும் ஏராளமான வெட்டுகள். அது ஒரு முக்கியமான தடயம். ஏதோ ஒரு யுத்தத்துல காயம் பட்டு செத்துப் போன போர்வீரன்ங்கற அளவுக்கு கண்டுபிடிச்சிட்டாங்க. எந்த வருஷத்துல நடந்த எந்த யுத்தம்ங்கறதயும் கண்டுபிடிச்சிட்டா, ஒரு முடிவுக்கு வந்துடலாம். அந்த அளவுக்கு அவுங்க ஆராய்ச்சி முன்னேறிடுச்சி."

"படிப்படியா நெருங்கி வந்துட்டாங்கன்னு சொல்லுங்க."

"ஆமாம். அப்பதான் ஒருத்தர் அந்த எலும்புக் கூட்டுடைய முதுகுப் பகுதி வழக்கமான அளவைவிட கூடுதலா வளைஞ்சிருக்கறத கண்டுபிடிச்சாரு. மானுடவியல் துறை ஆட்கள் கண்டுபிடிச்ச உண்மைகளை வச்சிகிட்டு வரலாற்றுத்துறை ஆட்கள் செஞ்ச ஆராய்ச்சியில, அது வரைக்கும் மறைஞ்சிருந்த ஒரு உண்மை வெளிச்சத்துக்கு வந்தது."

"என்ன உண்மை சார்?"

"அந்த எலும்புக்கூட்டுக்குச் சொந்தக்காரன் அது மூனாவது ரிச்சர்ட் என்கிற அரசன். அந்த யுத்தத்துடைய பெயர் பாஸ்வொர்த் ஃபீல்ட் யுத்தம். மூனாவது ரிச்சர்டுக்கும் ரிச்மண்ட்ங்கறவனுக்கும் நடந்த யுத்தம்."

"உண்மையிலேயே அப்படி ஒரு யுத்தம் நடந்ததா?"

"ஆமாம். மூனாவது ரிச்சர்ட் பெரிய வீரன். ஆனா, நல்லவன் இல்லை. கொஞ்சம் குரூரமான தோற்றம் உள்ளவன். முதுகுலயும் கூன் விழுந்திருந்தது. ஆட்சியைப் பிடிக்கறதுக்காக பல கொலைகளை செஞ்சிட்டு சிம்மாசனத்துல உட்கார்ந்தான். அது ரொம்ப காலம் நீடிக்கலை. ஒருநாள் அவன் தூங்கிகிட்டிருந்த சமயத்துல ரிச்மண்ட்ங்கறவன் அவன் நாட்டின் மீது படையெடுத்து வந்து மோதினான். சண்டை கடுமையா நடந்தது. அந்த சண்டையில ரிச்சர்டுடைய குதிரை செத்துப் போயிடுச்சி. அவனுக்கு அவசரமா ஒரு குதிரை தேவைப்பட்டது. எனக்கு ஒரு குதிரை வேணும், குதிரை வேணும்னு அந்த போர்க்களத்துல அவன் போட்ட சத்தம் யாருக்கும் கேக்கலை. காது குடுத்துக் கேட்டவங்க யாரும் அவனுக்கு உதவி செய்யலை. அவனால அந்தப் போர்ல ஜெயிக்கவும் முடியலை, அங்கிருந்து தப்பிச்சி போகவும் முடியலை. ரிச்மண்ட் அவனுடைய பின்னந்தலையில அடிச்சி பிளந்துடறான். அநியாய மரணம். ஆனா, அதுக்காக யாரும் வருத்தப்படலை. அரசாங்கங்கள் அப்படித்தானே அமைக்கப்படுது. வீரர்களோடு வீரனா ரிச்சர்டுடைய உடல் எடுத்துச் செல்லப்பட்டு பொதுமக்களுக்கான கல்லறைப் பகுதியில கூட்டத்தோடு கூட்டமா புதைச்சிட்டு போயிடறாங்க. என்னதான் இருந்தாலும் அவன் அரசன் இல்லையா? சவப்பெட்டி செய்யறவன், அவனுடைய சவப்பெட்டி மேல ஒரு சிறப்பு இலச்சினைப் பிடியை வைச்சி புதைச்சிடறான்."

"ஒரு பெட்டிக்குப் பின்னால இவ்வளவு பெரிய கதையா?"

"இன்னும் கதை முடியலை, கேளுங்க. அம்பது நூறு



வருஷத்துக்குப் பிறகு அங்க இருந்த தேவாலயமும் கல்லறையும் இடிஞ்சி பாழடைஞ்சி போயிடுது. ஊருக்குள்ள வேற ஒரு தேவாலயம் புதுசா வந்துட்டதால பழைய தேவாலயத்தை எல்லாருமே மறந்துடறாங்க. அதுக்கப்புறம் அம்பது நூறு வருஷம் கழிச்சி அந்த இடத்துல துறவிகளுக்கான ஒரு மடம் கட்டறாங்க. பிறகு அதுவும் இடிஞ்சி மண்ணோடு மண்ணா மாறிடுச்சி. அதுக்குப் பிறகு அந்த இடம் ரொம்ப காலத்துக்கு மக்கள் நடமாட்டம் இல்லாத புறம்போக்கா கெடந்தது. இருபது முப்பது வருஷத்துக்கு முன்னாலதான் அங்க ஒரு புறநகர் உருவாச்சி. அந்த நகரத்துக்கான கட்டுமான வேலை நடந்துட்டிருந்த சமயத்துலதான் அந்த சவப்பெட்டியைக் கண்டுபிடிச்சாங்க."

"ஒரு சவப்பெட்டிக்குப் பின்னால இவ்வளவு செய்திகளா? ஒரு நாவல் படிக்கிறமாதிரி இருக்குது சார்."

"கதை இத்தோடு முடியலை. இன்னும் இருக்குது. மூனாவது ரிச்சர்டுடைய எலும்புக்கூடுதான் அதுன்னு தீர்மானமா தெரிஞ்ச பிறகு, அதை அப்படியே எப்படி விட்டுடமுடியும்? என்னதான் அக்கிரமக்காரனா இருந்தாலும் அரசவம்சத்தைச் சேர்ந்தவன் இல்லையா? அந்த ராஜகுடும்பத்துகுரிய மரியாதையோடு அடக்கம் செய்யணும்னு சமூகத்திலிருந்து ஒரு குரல் எழுந்தது. அதனால அந்த எலும்புக்கூட்டை இன்னொரு சவப்பெட்டிக்குள்ள வச்சி, தேவாலயத்துக்குள்ள அரசகுடும்பத்தைச் சேர்ந்தவர்களுடைய கல்லறைகள் இருக்கும் பகுதியில சகல மரியாதையோடு மறுஅடக்கம் செஞ்சாங்க. கிட்டத்தட்ட மூனு வருஷ காலம் இந்த சம்பவம் துண்டு துண்டா நடந்தது. இந்த நோட்டுல இருக்கிற துண்டு துண்டா கிடக்கிற செய்திகளை ஒன்னொன்னா படிச்சிகிட்டே போனீங்கன்னா, முழு வரலாற்றையும் தெரிஞ்சிக்கலாம்."

"அருமை சார். அருமை."

"பதினஞ்சாம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியில அந்த ரிச்சர்டுடைய வம்சம் முடிவுக்கு வந்திருக்குது. அவனுடைய வீரம், துரோகம், வெறி, அதிகாரம் பத்திய கதைகள் மக்கள் நடுவுல ஆழமா வாய்வழிக் கதையா பேசிக்கிற அளவுக்கு பிரபலமா இருந்திருக்குது. இந்த யுத்தம் முடிஞ்ச நூறு நூத்தம்பது வருஷம் கழிச்சி நாடகம் எழுத வந்த ஷேக்ஸ்பியர் இந்த அரசனுடைய கதையை மையமா வச்சி மூனாவது ரிச்சர்ட்னு அற்புதமான ஒரு நாடகம் எழுதினாரு. 'எ ஹார்ஸ்! எ ஹார்ஸ்! மை கிங்டம் ஃஃபார் எ ஹார்ஸ்'னு ஒரு அருமையான வரி அந்த நாடகத்துல உண்டு. ஒரு குதிரைக்காக அந்த யுத்தகளத்துல அவன் தவிக்கிற தவிப்பை அந்த வரியில பார்க்கலாம். குதிரை இருந்திருந்தா, ஒருவேளை ரிச்சர்ட் அந்த யுத்தத்துல ஜெயிச்சிருக்கலாம். அவனுடைய அழிவு அப்படி அமையணும்னு விதி. அதை யாரால மாத்தமுடியும்? ஷேக்ஸ்பியருடைய இந்த நாடகத்தை ரெண்டு மூனு பேரு படமா எடுத்திருக்காங்க. நீங்க பார்த்திருக்கீங்களா?"

"இல்லை சார்"

"ஏதாவது ஒரு வெர்ஷன பாருங்க. நல்ல அனுபவமா இருக்கும்."

என்னால் சில கணங்கள் பேச முடியவில்லை. அமைதியாக அந்த நோட்டுகளையே புரட்டிக் கொண்டிருந்தேன். ஓர் அரைப்பக்கக் குறிப்புக்குப் பின்னால் இவ்வளவு பெரிய வரலாறு மறைந்திருப்பதைக் கேட்டு மலைத்துவிட்டேன். அந்த நோட்டுப் புத்தகத்தில் எஞ்சியிருக்கும் குறிப்புகளை முன்வைத்து இன்னும் உரையாடிக்கொண்டே இருக்கலாம் என்று தோன்றியது.

அப்போது விசித்திரமான ஓர் எண்ணம் எழுந்தது. இங்கிலாந்து வரலாறாக இருந்தாலும் சரி, ஐரோப்பா, ஆப்பிரிக்க, ஆசிய வரலாறாக இருந்தாலும் சரி, மன்னராட்சிக் காலம் என்பது ஒரு கோணத்தில் மரணங்களின் காலமாகவே இருப்பதாகத் தோன்றியது. கொலை என்று வந்துவிட்டால் உறவு, பாசம், நட்பு, காதல் எல்லாவற்றையும் கடந்து கொன்றுவிட்டு போய்க்கொண்டே இருப்பதைத்தான் பார்க்க முடிகிறது. இரக்கமோ குற்ற உணர்வோ யாரிடமும் இருந்ததாகத் தெரியவில்லை. கோர்வையாக சொல்ல முடியவில்லை என்றபோதும் துண்டுதுண்டாக விட்டல்ராவிடம் அதைச் சொல்லி முடித்தேன்.

துயரமான புன்னகையே விட்டல்ராவிடமிருந்து பதிலாக வெளிப்பட்டது. பிறகு ஒரு பெருமூச்சுடன், "அதிகாரத்தின் மீது இருக்கிற அளவு கடந்த ஈர்ப்புதான் அதற்குக் காரணம்னு தோணுது பாவண்ணன். அதிகாரம் எப்படிப்பட்டது, அது ஒரு மனிதனை என்னென்ன செய்யுங்கறத நம்ம மாதிரியான எளிய மனிதர்களால புரிஞ்சிக்கவே முடியாது. அதிகாரத்துக்கு ஆசைப்படற ஆளுதான் அதைப்பத்தி தெளிவா புரிஞ்சி வச்சிருப்பான்" என்று சொன்னார். ●

**பாவண்ணன்**
<writerpaavannan2015@gmail.com>

# சௌவி கவிதைகள்

ஓவியம்: **Thuraya Al-Baqsami**



## 1. தனிமையற்ற தனிமை

என் தனிமையின் கனவில்
இரண்டு மஞ்சள் நிறப்பூக்களும்
இரண்டு ஆரஞ்சு நிறப்பூக்களும்
பூத்திருந்தன.
மிக உயரத்தில் நீண்டு செல்லும் மின்கம்பியில்
மேகவண்ண வானத்தின் பின்னனியில்
இரண்டு கருப்பு நிறப்பறவைகள்
இலேசான மழைத்தூறலில் நனைந்தபடி
பேசிக்கொண்டிருந்தன.
தோட்டத்தில் நேற்றுப்பெய்த மழைக்கு
இரண்டு காளான்கள்
நல்ல செழிப்போடு
அருகருகே பூத்திருந்தன.
அழகான பச்சை வனத்துக்குள்
தங்கள் உடல்களை மறைத்துக்கொண்டு
இசையனுப்பி இசையனுப்பி
மாறி மாறிப் பேசிக்கொண்டிருந்தன
இரண்டு குயில்கள்.
என் தனிமையின் கனவில்
வெகு உயரமான மலையிலிருந்து
சோவென்ற சப்தத்தோடு
இரண்டுஅருவிகள்குதித்துக்கொண்டிருந்தன.
அலையடிக்கும் கரையிலிருந்து பார்க்கையில்
அலையடிக்காத அமைதியான கடலுக்குள்
இரண்டு கப்பல்கள்
அமைதியாக நின்றுகொண்டிருக்கின்றன.
இலேசாக அடிக்கும் காற்றில்
இலைகளடர்ந்த பூவரச மரத்திலிருந்து
இரண்டு இலைகள்
ஒன்றாக தரை நோக்கிப்பயணிக்கின்றன.
என் தனிமையில்
நான் தனியாயிருப்பதில்லை

## 2. துயர இரவு

இத்துயர்மிகு இரவைப்பற்றி
யாரும் என்னிடம்
எதுவும் கேட்காதீர்கள்.
துயரத்தை
யாரோ வட்டமாகத் தட்டி
பூரண நிலவென
கருப்பு வானில் எறிந்திருக்கிறார்கள்.
யாரோ துயரத்தை
சாமையிடிக்கும் கல்லில் போட்டு
நன்றாக இடித்துப் பொடியாக்கி
நட்சத்திரங்களென
வானத்தில் தூவியிருக்கிறார்கள்.
துயரத்தை யாரோ நன்றாக அரைத்து
இரவின் மேனியெங்கும் இடைவெளியில்லாமல்
கருப்பு வர்ணமெனப் பூசியிருக்கிறார்கள்.
யாரோ துயரத்துக்கு
சின்னச் சின்ன இறக்கைகளைக் கொடுத்து
மின்னாம்பூச்சிகளாக்கி
பறக்க விட்டிருக்கிறார்கள்.
இத்துயர்மிகு இரவைப் பற்றி
யாரும் என்னிடம்
எதுவும் கேட்காதீர்கள்

## 3. தனிமைக்குள் தள்ளப்படுதல்

என் பகலில் சூரியனிருக்கிறது
நீல வானமிருக்கிறது
வெள்ளை மேகங்களிருக்கின்றன
ஏராளமான மனிதர்களிருக்கிறார்கள்
ஆனாலும் நான்
தனித்துவிடப்பட்டிருக்கிறேன்.



என் இரவில் நிலவிருக்கிறது
நட்சத்திரங்களிருக்கின்றன
மின்னாம்பூச்சிகளிருக்கின்றன
கருப்பு வர்ண இருட்டு இருக்கிறது
ஆனாலும் நான்
தனித்துவிடப்பட்டிருக்கிறேன்.
என் மாலையில்
கடற்கரை இருக்கிறது
கடல் இருக்கிறது
பூங்கா இருக்கிறது
காதல் இருக்கிறது
காதலி இருக்கின்றாள்
ஆனாலும் நான்
தனித்துவிடப்பட்டிருக்கிறேன்.
என் வீட்டில்
அம்மா அப்பா இருக்கிறார்கள்
தம்பி தங்கை இருக்கிறார்கள்
ஆனாலும் நான்
தனித்துவிடப்பட்டிருக்கிறேன்.
என் அறையில் நாய் இருக்கிறது
வெள்ளைப் பூனை இருக்கிறது
கூடுகட்டி வாழும்
சிட்டுக்குருவி இருக்கிறது
ஆனாலும் நான்
தனித்துவிடப்பட்டிருக்கிறேன்.
என் தனிமைக்குள் நுழைய
நான் அனுமதி மறுக்கிறேனா
அல்லது
என் தனிமைக்குள் நுழைய
நீங்கள் விரும்பவில்லையா
என்பதெல்லாம் எனக்குத் தெரியாது
ஆனால்
நான் தனித்துவிடப்பட்டிருக்கிறேன். ●

சௌவி <souvi36@hotmail.com>

# ராஜபோகம்

ச. சுரேஷ்

நான் வந்த ஏர் இந்தியா விமானம் அமெரிக்காவிலிருந்து நேராக புது டெல்லி வந்தது. பிறகு, அதே விமானம் டெல்லியிலிருந்து ஹைதராபாத் சென்றது. குடிபுகல், சுங்கச் சோதனை போன்ற சம்பிரதாயங்களை ஹைதராபாத்தில் செய்தால் போதுமானது என்று ஏர் இந்தியா ஊழியர் தெரியப்படுத்தினர்.

எனக்கு இது ஒரு புதிய அனுபவம்.

வெளிநாட்டிலிருந்து அமெரிக்கா நுழையும்போது, முதல் முதல் காலடி எடுத்து வைக்கும் நகரில்தான் குடிபுகல், சுங்கச் சோதனை முதலியவற்றை செய்யவேண்டும். மேலும், வெளிநாட்டிலிருந்து வரும் விமானத்தை உள்நாட்டுப் பயணத்திற்குப் பயன்படுத்துவதில் பல கட்டுப்பாடுகள் உள்ளன. அதில் முக்கியமானது, வெளிநாட்டிலிருந்து வரும் அனைத்துப் பயணிகளும் விமானத்திலிருந்து இறங்க வேண்டும். அவர்களுடைய உடைமைகள் அனைத்தும் விமானத்திலிருந்து நீக்கப்பட வேண்டும். குடிபுகல், சுங்கச் சோதனை முதலியவற்றை முடித்த பின்னே அமெரிக்கா வரும் பயணிகள் உள்நாட்டுப் பயணத்தை தொடரலாம். வெளிநாட்டிலிருந்து வந்த விமானம் முழுவதும் காலியான பிறகே உள்நாட்டுப் பயணத்திற்கு உபயோகப்படுத்த அனுமதி கிடைக்கும்.

அமெரிக்காவிலிருந்து டெல்லிக்கு வந்த விமானத்திலிருந்து இறங்காமல், அதே விமானத்தில் டெல்லியிலிருந்து ஹைதராபாத் போகலாம் என்பது எனக்குப் புதுமையாக இருந்தது. பேச்சுவாக்கில் இதை என்னுடைய நண்பர் தில்லை கோவிந்தராஜனிடம் கூறினேன். சுங்கச் சோதனை அதிகாரியாக வேலை செய்து ஓய்வுபெற்ற அவருடைய முகத்தில் அர்த்தமுள்ள ஓர் புன்னகை அரும்பியது. அடுத்ததாக வரப்போவது என்னவென்று எனக்கு நன்றாகவே தெரியும்.



“இது நம்ப தேசத்தில வழக்கமா நடக்கறதுதான். இப்பவெல்லாம் எஸ்கார்ட் டியூட்டின்னா சுங்கச் சோதனை ஆபீசரெல்லாம் மூ...சியை சுளுக்குவாங்க. எப்படிடா இந்த டியூட்டிலயிருந்து கழண்டுக்கலாம்ன்னு பாப்பாங்க. ஆனா நான் வேலை செஞ்சப்ப அப்படியில்லை. எஸ்கார்ட் டியூட்டின்னா ஒரு விடுமுறை மாதிரி. அதுவும் ஒரு பைசா செலவில்லாத விடுமுறை,” என்றார் தில்லை.

கோவிந்தராஜன் என்ற பெயரைவிட, தில்லை என்ற பெயரால் அறியப்படும், தில்லை கோவிந்தராஜன் கூறியது என்னைக் குழப்பியது.

அமேரிக்காவில் எஸ்கார்ட்ன்னா பலான தொழிலை குறிப்பிடும் வார்த்தை. ஆண்களுடன் மாலை, இரவு நேரங்களில் இருப்பதற்கு ஒப்புக்கொள்ளும் பெண்களை ‘எஸ்கார்ட்’ என்று குறிப்பிடுவார்கள். வெளிஊருக்கு தனியாக டூர் போகும் ஒரு சில ஆண்கள் எஸ்கார்ட் பெண்களை நாடுவது அங்கு நடக்கக்கூடிய நிகழ்வு.

‘எஸ்கார்ட் டியூட்டியா?’ என்ற கேள்வி என் வாய் நுனியில் இருந்தது. ஆனால், நான் ஏதாவது கேள்வி கேட்டால், அதற்குப் பிறகு தில்லையை நிறுத்த முடியாது என்று எனக்கு நன்றாகத் தெரியும்.

இருந்தாலும், அப்பொழுதிருந்த குழப்பத்தில், வாய் நுனியிலிருந்து கேள்வி என்னையும் அறியாமல் வெளிவந்துவிட்டது.

“எஸ்கார்ட் டியூட்டியா?”

“நீங்க வந்தது ஒரு இன்டர்நேஷனல் ஃபிளைட். ஆனாலும் டெல்லி ஹைதராபாத் டொமெஸ்டிக் செக்டர்ல வெளிநாட்டுப் பயணிகளோட உள்நாட்டுப் பயணிகளும் கலந்திருப்பார்கள். அந்த மாதிரி ஃபிளைட்ல ஒரு சுங்கச் சோதனை அதிகாரியும் பயணம் செய்யணும். அவங்களைத் தான் எஸ்கார்ட் ஆபீசர்னு சொல்லுவோம்.”

என்னுடைய குழப்பம் எதனால் என்று தெரியாமலேயே தில்லை அளித்த விளக்கம் எனக்கு நிம்மதியளித்தது.

தில்லை தொடர்ந்து பேசினார்.

“ஒரு தடவை நான் கோவாவுக்கு எஸ்கார்ட் ஆபீசரா போனேன். அந்தக் கதையை உங்ககிட்ட சொல்லலைன்னு

நினைக்கிறேன். ரொம்ப இன்டெரெஸ்ட்டிங் ஸ்டோரி," என்றார்.

"இப்ப வேண்டாம் தில்லை... வேற ஒரு சமயம் சொல்லுங்க..."

"அட, நீங்க வேற... ரொம்ப சுவாரசியமான கதை இது. கேளுங்க," என்றவாறு தில்லை பேசத் தொடங்கினார்.

அன்று திங்கட்கிழமை.

சாயங்காலம் சீக்கரம் வந்துருங்க. கோவிலுக்குப் போகணும்னு வொய்ஃப் சொல்லியிருந்தா. நானும் வேலையை முடிச்சிட்டு கிளம்பத் தயாராக இருந்தேன். அப்ப எங்க சூப்பர்வைஸர் வந்தார்.

"தில்லை, இன்னைக்கு ஆர்ஜெண்டா நீங்க கோவா போக முடியுமா? பாலாஜி வொய்ஃப்புக்கு உடம்பு சரியில்லைன்னு வீட்டுக்கு போயிட்டாரு. அருமையான ஷிஃப்ட். உடனே திரும்பக்கூட வேண்டாம். ரெண்டு நாள் இருந்துட்டு புதன்கிழமை வந்தா போதும். நானே போயிருப்பேன். 'நான் வராம இன்னொருதடவை நீங்க கோவா போனா, அங்கேயே வெள்ளைக்காரி எவளையாவது கட்டிக்கிட்டு இருங்க; திரும்ப வீட்டுக்கு வர வேண்டாம்'னு வீட்டில ஒரே மிரட்டல்."

"கோவான்னா உடனே வெள்ளைக்காரியா? என்ன சார் இது?"

"இது உங்களுக்கு புரியுது. இதையெல்லாம் வீட்டில லாஜிக்கலா ஆர்க்யூ பண்ண முடியுமா? சொல்லுங்க தில்லை..."

"போர்சுகீஸ் வெள்ளைக்காரங்களா? அப்படியே இருந்தாலும் அவங்கதான் மூட்டையை கட்டி எழுபத்தி ஐந்து வருடங்கள் ஆயிடுச்சே? குழப்பமா இருக்கு சார்..."

"யோவ், தில்லை... நான் இங்கே டென்ஷன்ல இருக்கேன்... நீங்க போர்சுகீஸ் வெள்ளைக்காரியான்னு விஷயத்தையே திசை திருப்பிட்டிருக்கீங்க. கோவா போக ஓகேயா?"

"ஸாரி சார், என்னைப் போய் மாட்டி விடறீங்களே. சாயங்காலம் வொய்ஃபை கோவிலுக்கு கூட்டிகிட்டு போகறேன்னு சொல்லியிருந்தேன்..."

நான் இழுத்தேன். ஆனாலும் மனசுக்குள்ள ஒரு நப்பாசை உருவெடுத்தது.

"தில்லை, இதான வேணாங்கறது. கோவிலா, கோவாவா? இதெல்லாம் ஒரு சாய்ஸா? கோவில் எப்பவும் இங்கதான் இருக்கும். கோவா ஆப்பர்சூனிட்டி திரும்ப வருமோ வராதோ..."

நப்பாசை மெதுவாக உந்தியது.

"இன்கமிங் சிங்கப்பூர் ஃப்ளைட் இன்னும் ஒன் அவர்ல லாண்ட் ஆவுது. வீட்டுக்கு போயிட்டு வரதுக்கு கூட உங்களுக்கு நேரமில்லை. ப்ளீஸ், தில்லை சேவ் மை மாரேஜ் அண்ட் ஹாவ் எ ஃப்ரீ பெய்ட் ஃபைவ் ஸ்டார் ஹாலிடே."

சூப்பர்வைஸரும் விடாமல் பிரஷர் பண்ணினார்.

எஸ்கார்ட் டியூட்டில நான் எவ்வளவோ இடங்களுக்கு போயிருக்கேன். கோவா மட்டும்

இதுவரை அமையவில்லை.

"சார், நான் வொய்ஃப் கிட்ட எப்படி சொல்லறது? திடீர்னு கிளம்பறேன்னு சொன்னா என்ன சொல்லுவாளோ? கோவிலுக்கு வேறே கூட்டிட்டு போகறேன்னு ஒத்துக்கிட்டு இருக்கேன்..."

"டோன்ட் வொர்ரி தில்லை. நானே உங்க வொய்ஃப் கிட்ட பேசறேன்."

என்னோட தர்மபத்தினியிடம் அவரே பேசறேன்னு ஒத்துக்கிட்டார் பாருங்க... அது ஒரு மாஸ்டர் மூவ். பாஸ்கெட்பால் விளையாட்டில் இதைத்தான் "ஸ்லாம் டன்க்" என்று கூறுவார்கள்.

"ஆல்ரைட் சார். நீங்க இவ்வளவு சொல்லறீங்க..."

நான் அந்த வாக்கியத்தை முடிக்கவில்லை.

மனது மாறிவிடுவேன் என்ற பயமோ, என்னவோ, சூப்பர்வைஸர் டக்கென்று கோவா ஃபிளைட் லாகில் என்னுடைய பெயரைப் பதிவு செய்தார்.

பயணத்திற்கு முன் செய்ய வேண்டிய பேப்பர் வொர்க் சம்பிரதாயங்களையும் செய்து முடித்தார்.

கோவா செல்லும் ஏர் இந்தியா பிளைபிட்டின் உள்ளே நடந்தவாறு விமானத்திற்குள் ஒரு நோட்டம் விட்டேன்.

எல்லாம் சாதுப் பிரயாணிகளாகத்தான் தோன்றினார்கள்.

மஃப்ட்டியில் இருக்கும் எஸ்கார்ட் ஆபீசரின் முக்கிய வேலை வெளிநாட்டுப் பயணிகளுக்கும் உள்நாட்டுப் பயணிகளுக்கும் இடையே பண்டமாற்றம் ஏதும் நடக்காமல் கண்காணிக்க வேண்டும். சந்தேகத்திற்கிடமாக யாராவது நடந்துகொண்டால் விமானத்திலிருந்து இறங்கும் சமயம் அவரை டியூட்டியிலுள்ள சுங்கச் சோதனை அதிகாரிகளிடம் ஒப்படைக்க வேண்டும்.

அன்று எனக்கு வேலை ஒன்றும் இருக்காது என்று தோன்றியது. என்னுடைய முதல் வகுப்பு இருக்கைக்கு வந்து அமர்ந்தேன்.

ராமச்சந்திரன் (அவர்தான் என்னுடைய மேலதிகாரி) கூறியபடி ஐ.டி.ஸீ. ஷெரட்டன் ஐந்து நட்சத்திர ஹோட்டலில் இரண்டு இரவு தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார்.

டபோலிம் விமான நிலையத்தில் பூப்போல இறங்கியது விமானம்.

ஒன்றிரண்டு ஆவணங்களில் கையெழுத்திட்டு, கோவா சுங்கச் சோதனை அதிகாரிகளிடம் கொடுத்ததுடன் என்னுடைய பொறுப்பு முடிந்தது.

புதன் காலை ஃபிளைட்டில் திரும்பவேண்டும். அதுவரை ஷெரட்டனில் நட்சத்திர வாசம்.

ஏர்போர்ட்டிலிருந்து ஷெரட்டன் ஹோட்டலுக்கு செல்ல விமான ஊழியர்களுக்கு ஒரு வேன் வந்திருந்தது. நானும் அதில் ஏறிக்கொண்டேன்.

என்னுடைய லக்கேஜ் மிகவும் கம்மி. இதுபோல திடீரென்று போகும் சூழ்நிலை உண்டாகலாம் என்பதனால் எஸ்கார்ட் டியூட்டி செய்யக்கூடிய அனைவரும் மாற்றுத் துணிமணிகள் கொண்ட ஒரு சிறிய பெட்டியை ஆபீஸில் வைத்திருப்போம். அந்த சிறிய பெட்டிதான் என்னுடைய லக்கேஜ்.

ஷெரட்டன் ஹோட்டல் உள்ளே போகும்போது ஏர் இந்தியா கம்பெனியின் மகாராஜவைப் போலவே மீசையுடன், சிவப்பு நிற உடையணிந்திருந்த துவாரகபாலன் எனக்கு ஸலாம் அடித்தான். தலையசைத்தவாறு அதை ஏற்றுக்கொண்டு, அடுத்தமுறை அவனுடைய கையில் ஒரு பத்து ரூபாயை அழுத்தவேண்டும் என்று சொல்லிக்கொண்டேன்.

ஐந்தாவது மாடியிலுள்ள அறைக்கு என்னைக் கொண்டு விட்ட 'பெல் பாய்', "இது லைட் ஸ்விட்ச்; இது பாத்ரூம்; இது குழாய் திறந்தால் தண்ணீர் வரும்; இது படுக்கை - இதன் மேல் படுத்து உறங்கலாம்; இது கர்டென் - இதைத் திறந்தால் வெளியே பார்க்கலாம்..." என்று ஒவ்வொரு சிறு விஷயத்தையும் எடுத்துக்கூறினான்.

அவன் கையில் ஒரு பத்தை அழுத்தாவிட்டால் அங்கிருந்து கிளம்ப மாட்டான் போலிருந்தது.

பர்ஸைத் திறந்தேன்.

உள்ளே இருந்தது ஐம்பது ரூபாய்.

நான்கே நான்கு ரூபாய் நோட்டுகள் - ஒரு இருபது ரூபாய், மூன்று பத்து ரூபாய். ஆக மொத்தம் ஐம்பது ரூபாய்.

கதையில் இந்தத் திருப்பம் என்னை நிமிர்ந்து உட்கார வைத்தது.

ஐ.டி.ஸீ. ஷெரட்டன் ஃபைவ் ஸ்டார் ஹோட்டலில் வெறும் ஐம்பது ரூபாயுடன் தில்லை என்ன செய்தார் என்று அறிய ஆவல் வந்தது.

அதுவரை ஏனோ, தானோ என்று பேசாமல் கேட்டுக்கொண்டிருந்த நான் தில்லையை அனாவசியமாக ஊக்குவித்தேன் - அது தேவையில்லை என்று நன்றாக அறிந்திருந்தாலும்.

"வெறும் ஐம்பது ரூபாயா?"

"பர்ஸில் ரெண்டு கிரெடிட் கார்ட், ஒரு டெபிட் கார்ட், தடுக்கி விழுந்தால் ஏ.டி.எம். எல்லாம் இல்லாத சமயம் அது. பணம் வேணும்னா பாங்க்ல செக் அல்லது வித்ட்ராயல் ஸ்லிப்பை பூர்த்தி செய்து டெல்லரிடமிருந்து பணத்தைப் பெற்றுக்கொள்ள வேண்டும். அப்ப ஐம்பது ரூபாய்க்கு கொஞ்சம் மதிப்பிருந்தாலும், நான் இருந்தது ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்ல. அங்கே ஐம்பது ருபாய் எந்த

மூலைக்கு?"

உண்மைதான். ஐம்பது ருபாய் எந்த மூலைக்கு? எறியும் விளக்கில் ஈர்க்கப்பட்ட விட்டல் பூச்சிக்கும் எனக்கும் அப்பொழுது ஒரு வித்தியாசமும் இல்லை.

"அப்புறம் என்னதான் நடந்தது, தில்லை?"

'பெல் பாய்' சந்தோஷமாக என்னுடைய ரூமிலிருந்துவெளியேறினான்.என்னுடைய பர்ஸின் கனம் கணிசமாகக் குறைந்து, நாற்பதானது அதற்கு முக்கிய காரணம்.

பெல் பாய் வெளியேறியவுடன் பாலாஜியை திட்டவேண்டும் என்று தோன்றியது. கூப்பிட்டேன்.

"உன்னோட வொய்ஃப்க்கு எப்படி இருக்கு?"

"அது இருக்கட்டும். கோவா எப்படி இருக்கு? பைவ் ஸ்டார் ஹோட்டல்... ஏஸீ ரூம்... பீச்... ராஜபோகம்டா..."

"பாலாஜி, முதல்ல உன்னோட வொய்ஃப்க்கு எப்படி இருக்குன்னு சொல்லு. கோவாவைப் பத்தி நான் அப்புறம் சொல்லறேன்."

"ஒண்ணும் பெரிய ப்ராப்ளம் இல்லை. லேசா தலையை சுத்தறாப்ல இருக்குன்னு சொன்னா. நான் கோவா போகாமல் வீட்டுக்கு போன உடனே எல்லாம் சரியாகப் போயிடுத்து."

"................................."

நான் சொன்னதை எந்த புத்தகத்திலும் பிரசுரிக்க முடியாது.

"சாரி, தில்லை. ராமச்சந்திரன் உன்னை இழுத்து விடுவார்னு நான் எதிர் பார்க்கலை... அவரே போவார்னு நினைச்சேன்."

"உங்கரெண்டுபேரோடமேரேஜையும்காப்பாத்த நான் காவு... பர்ஸ்ல எவ்வளவு இருக்குன்னு கூடப் பாக்காம இங்க வந்து மாட்டிக்கிட்டு இருக்கேன். நாற்பது ரூபாய்டா... இப்ப பர்ஸ்ல நாற்பதே ரூபாய் தான் இருக்கு."

"........................................"

"என்னடா, பேச்சையே காணோம்?"

"என்ன சொல்லறதுன்னே தெரியலை. ரொம்ப, ரொம்ப, சாரிடா. பனாஜியில் என்னோட ப்ரெண்ட் கணேஷ் இருக்கான். அவனை வேணா கொஞ்சம் பணம் கொண்டு வந்து தரச் சொல்லவா?"

"அதெல்லாம் வேண்டாம்டா. ஹோட்டல் சார்ஜ் எல்லாம் ஏர் இந்தியா உபயம். ஒரு விஷயம் மட்டும் நிச்சயம் கன்ஃபர்ம் பண்ணனும். திரும்பி இங்கேயிருந்து புதன்கிழமை ஏர்போர்ட் போறதுக்கு டாக்ஸி / வேன் சார்ஜ் ஏதாவது தரணுமா?"

"இல்லைன்னுதான் நினைக்கிறேன். எதுக்கும் நாளைக்கு ராமச்சந்திரன்கிட்ட பேசும்போது கன்ஃபர்ம் பண்ணறேன். நீ கைல பைசா இல்லாம எப்படிடா இருப்பே?"

"நீ ஏர்போர்ட் ட்ரிப்பைப் பற்றி கன்ஃபர்ம் பண்ணு. பாக்கியை நான் பார்த்துக்கறேன்."

செவ்வாய்க்கிழமை காலையிலேயே ஏர்போர்ட் பயணமும் ஏர் இந்தியா உபயமே என்று உறுதியளித்தான் பாலாஜி.

பர்ஸில் நாற்பது ரூபாயுடன் கோவாவின் ஐந்து நட்சத்திர ஹோட்டலில் என்னுடைய ராஜபோக வாழ்க்கை தொடர்ந்தது.

ஷெரட்டன் நீச்சல் குளம் எப்படி இருக்கிறது என்று பார்க்க விரும்பியது மனம்.

அங்கு சென்றேன்.

நீச்சல் குளம் பளிங்கு போல மின்னியது.

இதில் கொடுமை என்ன தெரியுமா? எனக்கு சுத்தமாக நீச்சல் தெரியாது.

பளிங்கு நீச்சல் குளத்தில் கால்களை நனைத்தவாறு சிறிது நேரம் உட்கார்ந்துகொண்டு இலவசமாகக் கிடைத்த நியூஸ் பேப்பரைப் படித்தேன்.

நீச்சல் குளத்தில், பிகினி உடையுடன் வெள்ளைக்காரப் பெண்ணொருத்தி நீந்திக் கொண்டிருந்தாள்.

அவளைப் பார்த்தால் போர்சுகீஸ் போலத் தெரியவில்லை.

இவனுக்கு எப்படி அவள் போர்சுகீஸா இல்லையா என்று தெரிந்தது உனக்கு சந்தேகம் வரலாம்.

'கண்ணால் காண்பதும் பொய், காதால் கேட்பதும் பொய், தீர விசாரிப்பதே மெய்' என்ற பழமொழிதான் இதற்கு விடையளித்தது.

நீந்தும்போது, அவளுடைய கவனக்குறைவினால், என் மீதும் நான் படித்துக் கொண்டிருந்த பேப்பர் மீதும் தண்ணீர் தெளித்தது.

"ஐயாம் ஸோ ஸாரி. ரியலி ரியலி ஸாரி," என்று மாய்ந்து, மாய்ந்து மன்னிப்பு கேட்டாள்.

"நோ ப்ராப்ளம்... டோன்ட் வொர்ரி... இட்ஸ் ரியலி நோ ப்ராப்ளம்," என்று அவளைப் பார்த்து அசடு வழிய சிரித்தேன்.

ஒரு முறை என்னுடைய மனைவி கவனக்குறைவினால் உணவருந்தும்போது என் மீது தண்ணீர் சிந்தியது நினைவுக்கு வந்தது.

அன்று அவளை நன்றாக திட்டினேன்.

நீச்சல் குள வெள்ளைக்காரியிடம், "இட்ஸ் ரியலி நாட் எ ப்ராப்ளம்," என்று புன்னகையுடன்

கூறிவிட்டு அங்கிருந்து கிளம்பினேன்.

கிளம்புவதற்கு முன் சொரீன் (அவளுடைய பெயர்) டென்மார்க் தேசத்துப் பெண் என்று அவளுடன் நடந்த சிறு உரையாடலில் உறுதிப் படுத்திக்கொண்டேன்.

சொரீனைப் பற்றி தயவு செய்து என்னுடைய மனைவி காதில் படும்படி பேசாவிட்டால் நன்றியுடன் இருப்பேன்.

அடுத்து ஹோட்டலை ஒட்டியிருக்கும் பீச் வரை போகலாம் என்று தோன்றியது.

வெளியே சென்றுகொண்டிருந்த என்னிடம் கான்ஸியர்ஜ், "குட் மார்னிங், மிஸ்டர் கோவிந்தராஜன். மதியம் ஃபோர்ட் அகுவாடாவிற்கு ஒரு டூர் போகிறது. பதினேழாம் நூற்றாண்டில் போர்சுகல் தேசத்தவர் இங்கு வந்தபோது கட்டப்பட்ட கோட்டை அது. குறைந்த செலவில் அங்கு சென்று வரலாம். உங்களுக்கு இந்த டூரில் ஆர்வமுள்ளதா?" என்று கேட்டான்.

கைவசமிருந்த நாற்பது ரூபாய் மரியாதையாக வாலை சுருட்டிக் கொண்டிருக்க வேண்டும் என்று நினைவு செய்தது.

நான் கான்ஸியர்ஜைப் பார்த்து புன்னகையுடன் பதிலளித்தேன்.

"நெக்ஸ்ட் டைம். நிச்சயம் அடுத்த முறை. இம்முறை நான் உங்கள் ஹோட்டலின் வசதிகளை அனுபவித்தவாறு ஓய்வெடுக்க முடிவு செய்துள்ளேன்."

"அஃப் கோர்ஸ், மிஸ்டர் கோவிந்தராஜன். எக்ஸலென்ட் சாயிஸ்," என்று அவன் என்னைப் பாராட்டினான்.

போணி செய்யவில்லையென்று அவனுடைய மேனேஜர் திட்டியிருக்கலாம். யார் கண்டது?

வெளியே செல்லும் படிகளில் இறங்கும்போது 'ஏர் இந்தியா மஹாராஜா' துவாரகபாலன் தொப்பியை சரி செய்துகொண்டு, மீண்டும் ஸலாம் அடித்தான்.

நேற்றிலிருந்து இன்றைக்குள் மீசை இன்னும் சிறிது வளர்ந்தது போலிருந்தது. இம்முறை அவனுடைய கையில் ஒரு பத்தை அமுக்கினேன். அவனுடைய முகத்தில் மலர்ந்த புன்னகை மீசையின் நீளத்துடன் போட்டியிட்டது.

கோவாவின் பீச்சில் சென்னை மெரினாவிலில்லாத தூய்மையும் ஒருவித கவர்ச்சியும் இருந்தது. சொரீனைப் போல பல வெள்ளைக்காரிகள் உடலின் அத்தியாவசியமான பாகங்களை மட்டும் மறைத்தவாறு உடையணிந்து, கால்களில் செருப்பில்லாமல் மணலில் நடந்துகொண்டிருந்தனர். திடுதிப்பென்று கடலினுள் ஓடி சிறிது தூரம் நீந்திவிட்டு வந்தார்கள்.

கடலோரத்தில் இருந்த ஒன்றிரண்டு மணிநேரம் சென்றது எப்படியென்று தெரியவில்லை.

மீண்டும் ஹோட்டலுக்கு வரும்போது துவாரகபாலன் விறைப்பாக ஒரு மிலிட்டரி ஸல்யூட் அடித்தான். பிறகு, பவ்யமாக, "வெல்கம் பாக், சார்," என்று கூறியவாறு கதவைத் திறந்தான்.

பத்தின் மகிமையை வியந்துகொண்டே உள்ளே சென்றேன்.

புதன்கிழமை விடியற்காலையிலேயே ஹோட்டலிலிருந்து செக் அவுட் செய்தேன். செலவெல்லாம் ஏர் இந்தியா ஏற்றுக்கொள்ளும் என்று தெரிந்திருந்தாலும் செக் அவுட் செய்யும்போது இதயத்துடிப்பு அதிகமானது.

அதற்கு அவசியமே இல்லாமல் கவுண்டர் பின்னாலிருந்த பெண், "யூ ஆர் ஆல் செட், மிஸ்டர் கோவிந்தராஜன்" என்று கூறினாள்.

அவளே, "ஏர்போர்ட் செல்வதற்கு உங்களுடைய காரும் ரெடி. ப்ளீஸ் விஸிட் அஸ் அகைன்," என்று பூசி மெழுகின புன்னகையுடன் வழியனுப்பினாள்.

கதவைத் திறந்த துவாரகபாலன், ஸலாம் விறைப்பான ஸல்யூட், இரண்டிற்கும் இடைப்பட்ட புதிய பாணியில் என்னை வணங்கினான்.

என்னுடைய பர்ஸிலிருந்த ஒரே இருபது ரூபாய் நோட் அவன் வசம் கைமாறியது.

"தாங்கயூ சார்," என்றவாறு தயாராக இருந்த மாருதி சுஸுகியின் பின் கதவை பவ்யமாகத் திறந்தான்.

ஷெரட்டன் ஹோட்டலிலிருந்து டபோலிம் ஏர்போர்ட் இருபது கிலோமீட்டர் தூரம். அதிகாலை நேரமாதலால் வழியில் போக்குவரத்து அதிகமில்லை. அரைமணியில் கார் ஏர்போர்ட் வந்தடைந்தது.

பர்ஸிலிருந்த கடைசி பத்து ரூபாய் நோட்டை கார் டிரைவரிடம் கொடுத்து விட்டு, நயா பைசா இல்லாமல் ஏர் இந்தியா விமானத்தை நோக்கி நடந்து சென்றேன்.

தில்லை கூறிய கதைகளில், "ஐம்பது ரூபாயுடன் ஐந்து நட்சத்திர ராஜபோகம்" முதலிடத்தை வகிக்கக்கூடியது என்று தோன்றியது.

"வெரி இன்டெரெஸ்டிங் ஸ்டோரி, தில்லை. அப்ப நான் கிளம்பவா?"

"திரும்பி வந்தபிறகு என்ன நடந்தது என்று நினைக்கிறீர்கள்?"

"ஆளை விடுங்க சாமி. உங்க வொய்ஃபோட கோவிலுக்கு போயிருப்பீர்கள். வேறென்ன?"

தில்லை பதில் சொல்வதற்குமுன் நான் கழண்டுகொண்டேன். ●

**ச. சுரேஷ்** <shompens@gmail.com>

# ‘ஈடு’ தரும் ஈடில்லா இன்பம்

**இந்திரா பார்த்தசாரதி**

ஓவியம்: **மருது**

தமிழிலக்கிய வரலாற்றில், இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர் போன்ற உரையாசிரியர்களுக்குக் கொடுக்கப்பட்டு வரும் இடம், வைணவப் பெருநூலாகிய நாலாயிரப் பிரபந்தந்ததுக்கு உரை கண்டவர்களுக்கு அளிக்கப்படவில்லை. இவ்வுரை நூல்கள், வியாக்கியானங்கள் என்று சமஸ்கிருத பெயரால் அழைக்கப்பட்டு, சமயம் சார்த்தியே வழங்கின என்பது காரணமாக இருக்கக்கூடும். சமயத்தை மறந்து, இவ்வுரைகளை இலக்கியமாகவும் சமூக வரலாற்று ஆவணங்களாகவும் காணும்போதுதான் நாம் எப்பேர்ப்பட்ட கருவூலத்தைக் காணத் தவறிவிட்டோம் என்பது தெரியவரும்.

பிரும்ம சூத்திரத்துக்கும் பகவத் கீதைக்கும் சமயப் பெரியோர்கள் அவரவர் கொள்கைகளை நிறுவ சமஸ்கிருதத்தில் உரை எழுதினார்கள். சமஸ்கிருதத்துக்கு இணையான மொழி தமிழ் என்பதால், தமிழில் எழுதப்பட்டிருந்த நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்துக்குத் தமிழில் உரை எழுதப்பட்டு, அவை சமஸ்கிருத பாஷ்யங்களுக்கு நிகராக வேண்டுமென்று இராமாநூஜர் தம் சிஷ்யர்களைப் பணித்தார். முதல் உரையாக, இராமானுஜர் பிரதம மாணாக்கராகியாகிய திருக் குருகைப் பிள்ளான் எழுதிய ‘ஆராயிரப்படி’ வெளிவந்தது. ‘படி’ என்றால், ஒற்றுக்களைக் கணக்கிடாமல் மற்றைய எழுத்துக்களைக் கணக்கில் கொண்ட கிரந்தம் என்று



பொருள். இவ்வுரைகளிலே, நம்மாழ்வார் அருளிய ‘திருவாய்மொழி’க்கு வடக்கு திருவீதிப்பிள்ளை அவர்கள் எழுதி, ‘ஈடு’ என்று சிறப்பிக்கப்பட்ட ‘முப்பத்தாறாயிரப்படி’ குறிப்பிடத்தக்கது. இது, இலக்கிய, இலக்கண நயங்களோடு மட்டுமல்லாமல், அக்காலத்திய சமூகச் செய்திகளைப் பற்றிய ஆவணமாகவுமிருக்கிறது. இக்காலத்தில், ஒரு தமிழ் நூலின் பரந்துப்பட்ட சிறப்பை ஆங்கில மொழி கொண்டு தெளிவுறுத்துவது போல், அக்காலத்தில், தமிழ் படைப்பின் சிறப்பை அகில இந்திய மொழியாக இருந்த சமஸ்கிருததில் புலப்படுத்த வேண்டியிருந்தது. ஆகவே இவ்வுரைகாரர்கள், தூய தமிழ் சொற்களும் அழகிய சமஸ்கிருதச் சொற்களும் கலந்த, மணியும் பவளமும் கோத்தாற்போன்ற ‘மணிப்பிரவாள’ நடையில் எழுதினார்கள். அவர்கள் எதிர்பார்த்த அளவுக்குஇந்நடை ஜன ரஞ்சகமாகவில்லை என்பதே, இவ்வுரைகளின் சிறப்பை அறிவதற்குத் தடையாக இருந்தது.

‘அக்காரக் கனியே’ என்கிறார் நம்மாழ்வார். ‘அக்காரக்கனி’ என்றால் என்ன? ‘கரும்பு’ என்கிறது ஈடு. அக் காரம் என்றால் காரமில்லாதது. ‘க்ஷாரம்‘ என்ற சமஸ்கிருதச் சொல்லே தமிழில் ‘காரம்‘ ஆயிற்று. கரும்புக்குக் கனி கிடையாது. காய் வர்க்கமான கரும்பே இப்படி இனித்தால், அதற்குக் கனி இருந்தால் எப்படி இனிக்கும்? இறைவன் அப்படி இனிக்கின்றான் என்கிறது ஈடு.

இப்பொழுது நாம் 'கட்டுடைத்தல்' (deconstruction) பற்றி அதிகம் பேசுகிறோம். எட்கார் ஆலன் போவின் 'The purloined letter' என்ற கதை எத்தனைப் பேரால் கட்டுடைக்கப்பட்டிருக்கிறது என்பதும் நமக்குத் தெரியும். டெர்ரிடா, லேகன் போன்ற பேர்களைக் கேள்விப்படாத அக்காலத்திலேயே, திவ்யப் பிரபந்தப் பாசுரங்கள் எவ்வாறு வியாக்கியானக் கர்த்தாக்களால் கட்டுடைக்கப் பட்டிருக்கின்றன என்று நாம் அறியும்போது ஆச்சர்யமாக இருக்கின்றது. ஒரு சொல்லை வைத்துக்கொண்டு, அதன் பின்னணியில், அது நிகழும் நிலையில், ஒரு தேர்ந்த வாசகன் மனத்தில் நினைவோட்டமாக, ஒன்றுக்கொன்று தொடர்பின் காரணமாகத் தொடர்ந்து விளையும் மன அசைவுகள், த்வொனிப் பொருள்கள் அனைத்தையும் கட்டுடைத்துக் காணும் இவ்வுரையாசிரியர் ஆற்றல் வியக்கத்தக்கது.

உதாரணமாக, ஒரு பாடல். இது 'திருவாய்மொழி'யில் வருகிறது.

அஞ்சிறைய மட நாராய்! அளியத்தாய்! நீயும் நின்
அஞ்சிறைய சேவலுமாய் ஆஆவென்று எனக்குஅருளி
வெஞ்சிறைப்புள் உயர்ந்தாற்குஎன் விடுதூதாய்ச் சென்றக்கால்
வன்சிறையில் அவன் வைக்கில் வைப்புண்டால் என்செயுமோ!

தமிழ் அக இலக்கிய மரபுக்கேற்ப, ஒரு தலைவி, தலைவனாகிய திருமாலுக்கு ஒரு பெண் நாரையை ஆண் நாரையுடன் தூது அனுப்புகின்றாள். அவனிடம் தன் விரக தாபத்தைச் சொல்லும்படி வேண்டுகின்றாள். 'ஆனால், தலைவன் நீங்கள் சொல்வதைக் கேளாமல் இருந்துவிட்டால் என்ன செய்வீர்கள்?' என்று அந்நாரைகள் வினவுவது போலிருக்கிறது இச்செய்யுள்.

மிகச் சாதாரணப் பாடல் போல் தோன்றுகிறதல்லாவா? 'ஈடு' எப்படி விளக்குகிறது இப்பாடலை?

'அழகிய சிறகுகளையும் மடப்பத்தையுமுடைய பெண்நாரையே' என்று விளிக்கின்றாள். ஏன் இப்படி விளிக்க வேண்டும்? காரியமாக வேண்டுமென்றால், முதலில் பேடையை முன்னிட்டுச் சேவலைப் பற்ற வேண்டும். வைணவ மரபில் திருமகள் மூலந்தான் திருமாலைப் பற்ற முடியும். அவன் பெயரே, 'திருமகள் கேள்வன்' தான். 'மிஸ்டர் மஹாலக்ஷ்மி'.

'அழகிய சிறகுகளை' ஏன் முதலில் சொல்ல வேண்டும்? 'குழந்தை, தாயின் உறுப்புக்கள் எல்லாம் கிடக்க, முலையிலே வாய் வைக்குமாறு போன்று, பறப்பதற்குச் சாதனமான சிறகிலே முற்படக் கண் வைக்கிறாள்'. புரிகிறதா? ஏன் 'அழகிய சிறகுகள்' என்று குறிப்பிடுகின்றாள்? 'நீர் பாய்ந்த பயிர் போன்று, ஒன்றற்கு ஒன்று கலவியால் பிறந்த மகிழ்ச்சி வடிவிலே தொடை கொள்ளலாமபடி (அறியலாம்படி) இருக்கின்றதாலின், 'அம்சிறை' என்கிறார்'. 'மட நாராய்'. மடம்- ஏவிக் காரியங் கொள்ளலாம்படி பணிவு தோன்ற இருந்தது.

'அளியத்தாய்' என்றால் 'அருள் பண்ணத்தக்கதாய்' என்று பொருள். 'அளி' என்றால் 'அருள்'. இங்கு நாரை என்ன அருள் செய்தது? தலைவனைப் பிரிந்து வாடியிருக்கையில்,' தூது போ' என்று சொல்வதற்கு வாகாக, முகம் காட்டி நின்றது. அதுவே அருள். அது தனித்து வரவில்லை. தன் துணையாகிய சேவலுடன் வந்திருக்கின்றது. தலைவி தனித்திருக்கத் தான் துணையுடன் இருப்பதினால், தலைவிபால் அநுதாபம் பிறக்கக் கூடும். இவள் நாரையைப் பார்த்தது எப்படி இருந்தது? சீதையைப் பிரிந்த இராமன் பம்பை நதிக் கரையில் அநுமனைச் சந்தித்தது போல் இருந்தது. 'ஈடு' இதை அழகாக இலக்கிய நயத்துடன் கூறுகின்றது. 'அச்சந்திப்பு வழி பறிப்பார் கையிலே அகப்பட்டு நிற்கத் தாய் முகத்திலே விழித்தாற்போன்று இருந்தது'. என்ன அர்த்தம்? வயலோரங்களில் இருந்த நீலோற்பலம், தாமரை ஆகிய மலர்கள், சீதையினுடைய கண்களுக்கும் முகத்துக்கும் போலியாக இருந்து இராமனை, 'வழி பறித்து' நிற்கின்றன. அப்பொழுது யதார்த்தத்தை உணர்த்தும் தாய் போல் அநுமன் வந்து உபகரிக்கின்றான். பிறகு இலங்கைக்குத் தூது போகின்றான். அது போல், இப்பொழுது நாரையும் தூது போக இருக்கின்றது.

'அம்சிறைய சேவல்'. சேவலின் சிறகுகளும் அழகாய் இருக்கின்றன. காரணம், 'பெண்ணை அணைந்து பெற்ற அழகு வடிவிலே தோன்றுமாதலின்'.

'எனக்கு அருளி', 'அவனைக் கண்ணால் காணப் பெறுவது என்றுகொல் என ஏங்கியிருக்கும் எனக்கு'. 'அருளி', 'அத்தலை குறைவு அற்றாற்போல அன்றோ அருளுக்கு விஷயமான இத்தலை குறைவு அற்றபடி'. அதாவது, 'அவ்விடத்தில் நீங்கள் இருவரும் ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்திருக்கிறீர்கள், ஆனால் இவ்விடத்தில், நான் தனித்திருக்கும் இந்தக் குறை நீங்க அருள வேண்டும்'. 'அருளி' என்று ஏன் சொல்லுகிறாள் தலைவி? அருள் செய்யக்கூடியவன் உலகில் இறைவன் ஒருவன்தான். 'இறைவனிடம் நீங்கள் எனக்காகத் தூது சென்றால் அதற்குச் சமனாக நான் என்ன கைம்மாறு செய்ய இயலும்? ஆகவே, இறைவனைப் போல், நீங்கள் எனக்குச் செய்வது அருள்.'

'வெஞ்சிறைப் புள் உயர்ந்தார்க்கு'- கொடிய சிறகுகளை யுடைய கருடனை வாகனமாகக் கொண்டவன். ஏன் கொடிய கொடிய சிறகுகள்? தலைவியைத் தனியே தவிக்கவிட்டு அருளின்றித் தலைவனை (திருமாலை)த் தாங்கிப் பறந்து சென்றதால்.

'என் விடு தூதாய்' - 'பெரு மிடுக்கரான பாண்டவர்களுக்குக் கிருஷ்ணன் தூது போன்றதன்று, அபலையாய் மிக்க துன்பதையுடையளாய் இருக்கிற



எனக்குத் தூதாக'. (ஒவ்வொரு சொல்லையும் கட்டுடைத்து அதன் பின்னால் ஆசிரியருக்கே தெரியாமல் உள்ளீடாக நிழலிடும் த்வொனிப் பொருளை எடுத்துக் கூறுவதுதான் இவ்வுரையின் சிறப்பு.) 'சென்றக்கால், பிறருக்காகத் தூது போகை கிடைப்பது ஒன்றோ? சென்றால், எனக்கு முன்னே உங்களுக்கு அன்றோ பலன் சிந்திக்கப் புகுகிறது?' என்பாள். 'சென்றக்கால்' என்கிறாள். (அதாவது, இறைவனை தரிசிக்கும் பேறு உங்களுக்கல்லவோ முன்னால் கிடைக்கப் போகிறது?)

'வன்சிறையில் அவன் வைக்கில்' - 'தூது வந்தவர்களுக்கு முகம் கொடாதே வேறு ஒன்றிலே நோக்குடைவமாக இருத்தல். இவ்வாறு இருத்தலைச் சிறை என்னலாமோ எனின், அரச குமரர்கட்கு உரிய அவ்வவ்வக் காலங்களில் வெள்ளிலை (வெற்றிலை)இடாதபோது அவர்கள் வருந்துவார்கள். அது போன்று, இவைகட்கும் முகம் கொடுத்துக் கேளாமையே துனபத்தைத் விளைப்பதாம்.இதனையே 'வன்சிறை' என்றாள்.' (இங்கு அக்காலத்திய சமுதாயப் பழக்கமாகிய வெற்றிலைப் போடுதல் என்ற போகம் தரும் சடங்கு புலனாகிறது. இது பற்றிய அரசப் பணியில் இருப்பவர்களுக்கு 'அடைப்பைக்காரர்' என்று பெயர். அவர்களுக்கு நில மான்யமும் உண்டு)

'வைப்பு உண்டாகில் என் செய்யுமோ?'- 'பிறருக்காகச் சிறை இருப்பது, கிடைப்பது ஒன்றோ?' இராவணன் தெய்வப் பெண்களைச் சிறை வைக்க, தான் அவர்கள் கால் விலங்கைத் தன் காலில் கோத்துச் சிறை மீட்டவளன்றோ சீதை? தரிசனப் பேறு, தியாகப் பேறு இரண்டு கிடைக்கும்போது, தூது போவதில் என்ன தடை?'

நம்மாழ்வாரைத் தாண்டி, பாடல், உரை கண்டவர் உடைமையாய் ஆகிவிடுகிறது.

பாருங்கள். இதைதான், பின்நவீனத்வ விமர்சகர்கள், 'The author is dead' என்று கூறுவார்கள். அதாவது, படைப்பு, படைப்பாளியைத் தாண்டி, காலத்தை வென்று, வாசகர்களின் பார்வைக்கேற்பப் பொருள் பெறுகின்றது. ●

**இந்திரா பார்த்தசாரதி**
<parthasarathyindira@gmail.com>

# வாழ்க்கை என்பது பழிதீர்த்தல்

செவல்குளம் செல்வராசு

ஓவியம்: ஆனந்த் பஞ்சால்

அப்போதெல்லாம் சேர்மாதேவி சொடலமுத்து அண்ணன்,என் சேக்காளி முப்புடாதி வீட்டுக்கு அடிக்கடி விருந்தாளியாக வருவார். முப்புடாதிக்கு பாட்டி வழியில் தூரத்து சொந்தம். அண்ணன் முறை. நாங்களெல்லாம் அப்போது ஒன்பதாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்தோம். நாங்களென்றால் நான், முப்புடாதி, அவனுக்கு பங்காளி முறையான பேச்சிமுத்து.

சுடலை அண்ணன் எப்போதும் பொடிக்கட்டம் போட்ட சாரமும் காலர் வச்ச டீ சார்ட்டும் அணிந்திருப்பார். பின்னால் வார் வச்ச செருப்புதான் போடுவார். இருபத்தைந்து வயதுக்கான இளமையும் அழகும் மிளிர மிடுக்கோடு இருப்பார். நடையில், பேச்சில், செய்கையில் எப்போதும் ஒரு சண்டியர்த்தனம் இருக்கும். காக்கி உடுப்பும் பூட்சும் போட்டுக்கொண்டாரென்றால் போலீஸ் என்று யாரும் நம்பிவிடக்கூடும்.

சுடலை அண்ணனுக்கு முப்புடாதியின் அத்தை மகளான அழகுநாச்சி மதினி மீது ஒரு கண் இருந்தது. எப்ப ஊருக்கு வந்தாலும் இரண்டு மூன்று நாட்கள் தங்கிவிடுவார். எங்க வீட்டுக்கு மேல வீடுதான் அழகு மதினி வீடு. மதினி ரொம்ப நல்ல குணம். எம்மேல பாசமா இருப்பாக. சொடல அண்ணன் ஊருக்கு வரும்போதெல்லாம் என்கிட்ட மதினியப் பத்தியே கேட்டுக்கிட்டு இருப்பாரு. ‘அவளுக்கு என்ன கலர் பிடிக்கும்?, என்ன பாட்டு பிடிக்கும்?, என்ன பண்டம் பிடிக்கும்?, அவ யாரு ரசிகர்?‘ இப்படி எதையாவது கேட்டுக்கொண்டேயிருப்பார்

அண்ணன் சொல்லித்தான் எனக்கு தாமிரபரணித் தண்ணீரின் ருசியும் அதன் செழிப்பும் அறிமுகம். தண்ணீர் குடிக்கும்போதெல்லாம் ‘தாகமே அடங்கமாட்டுக்கடே... இத என்னனு குடிச்சுட்டுக் கிடக்கீய’ என்று ஆவலாதி சொல்லிக்கொண்டேதான் வேண்டா வெறுப்பாய் ஒரு மடக்கு குடிப்பார். அப்போதெல்லாம் எங்கள் ஊருக்கு தாமிரபரணி குழாய் வழியாகக் கூட எட்டிப் பார்த்திருக்கவில்லை



குடிநீருக்காக ஊருக்கு மேற்கே ஒரு மைல் தூரத்திலிருக்கும் பஞ்சாயத்துபோர்டுகிணற்றைத்தான் ஊரே நம்பியிருந்தது. பள்ளிக்கூடம் முடிந்து வந்ததும் ஆளாளுக்கு குடங்களுடனும் கொச்சைக் கயிறுடனும் தண்ணீர் இறைக்கப் படையெடுப்போம்.

தாமிரபரணியைப் பற்றிப் பேசியதும் கதை தண்ணீரின் பக்கம் திசைமாறிவிட்டதே. ஆனா, நான் சொல்ல வந்தது சேர்மாதேவி சொடலமுத்துவின் கதை.

நான், முப்புடாதி, பேச்சி மூன்றுபேரும் வழக்கமாக ‘தண்ணிக்குப்’ போய்ட்டு வந்ததும், ‘கம்மாய்க்குப்’ போவோம். கருப்பசாமி கோயிலுக்கு கிழக்கிட்டு உள்ள பாதை வழியாக போய்விட்டு, போனமா வந்தமான்னு இருட்டறதுக்குள்ள வீடு வந்து சேர்ந்துவிடுவோம்.

சுடலை அண்ணன் ஊருக்கு வந்திருக்கும்போது மட்டும் அவர் எங்களை நெடுதூரம் கூட்டிச் செல்வார். வழக்கமான பாதையில் போகாமல் நல்லதண்ணிக் கிணத்துக்கு போகும் வழியில் கூட்டிச்செல்வார். கருப்பசாமி கோயிலுக்கு மேற்க மஞ்சப் பள்ளிக்கூடம், அதுக்கு மேற்க பண்ணை வீடு, முத்துநயினார் கோயில், களம் எல்லாம் தாண்டி கூட்டப் புளியமரம் பக்கத்துல இருக்குற வண்டிப் பாதை வழியா மடை வரைக்கும் கூட்டிட்டுப்போவார். சில நேரங்களில் ஜேசுநாதபுரம் மாதாக் கோயில் ரேடியாச் சத்தம் கேட்கத் துவங்குகிற தூரம் வரையில்கூட சென்றுதிரும்புவோம். போகிற வழியில் தப்புக்குட்டித் தாத்தா கடையில் நான்கு கிங்ஸ் சிகரெட் வாங்கிக்கொள்வார்.

ஊரைத் தாண்டிப் போய், முதல் சிகரெட்டைப் பற்ற வைத்ததும் தன் வீர தீரக் கதைகளை அண்ணன்



அவிழ்த்துவிடுவார். ஆற்று வெள்ளத்தில் நீந்தும் திறமை, மொட்டைப் பனையேறி கிளிக் குஞ்சு பிடித்தது, முயல் வேட்டைக்குப் போனது, குற்றாலத்திற்கு சைக்கிள் பயணம், பௌர்ணமி வெளிச்சத்தில் நுங்கு திருடியது, சாதிப் பெருமிதம், 'பாரதி கண்ணம்மா' படம் ஓடிய தியேட்டர் திரையைக் கிழித்தது இப்படியாகத்தான் ஆரம்பத்தில் கதைகள் இருந்தன.

ஒருமுறை அண்ணன் வந்திருந்த போது நாங்கள் அரைப்பரீட்சை லீவில் இருந்தோம். 'ஒரு பிரச்சினை போலிஸ் ஸ்டேசன் வரைக்கும் போய்விட்டது என்றும், அந்தப் பிரச்சினை அடங்குற வரைக்கும் ஒரு வாரம், பத்துநாள் இங்கதான் இருப்பேன்' என்றும் சொன்னார்.

அன்று பொழுதடையத் துவங்கும்போது மேற்கு நோக்கி நடக்க ஆரம்பித்தோம். பண்ணை வீடு கடந்து முத்துநயினார் கோயில் அருகே போய்க்கொண்டிருந்தோம். கோயில் மதில் சுவரில் இருந்த முரட்டுக் கரட்டாண்டி எதைக் கண்டு மிரண்டதோ தெரியவில்லை. உயிர்பயத்தில் ஓடியது போலத் தோன்றியது.

அன்று பேச்சிமுத்து தன் காதல் கதையை அண்ணனிடம் சொல்லிக்கொண்டு வந்தான். ''ஆறாப்புலருந்து சின்சியரா காதலிக்கேம்ண்ணே...'' என்று துவங்கினான். இந்தக் கதையைக் கேட்டுக்கேட்டு புளித்துப்போய்விட்டபோதும், அண்ணனுக்காக அன்னைக்கும் கேட்டோம். அண்ணனுக்குப் பதிலாக நாங்கள் 'உம்' கொட்டிக்கொண்டே போனோம்.

கான்கிரீட் போடப்பட்ட களத்து மேட்டு சுற்றுச்சுவரில் அமர்ந்து திருப்பதியண்ணன், வெங்கியண்ணன், போத்தியண்ணன் மூவரும் எதையோ படித்துக் கொண்டிருந்தது தெரிந்தது. அவர்கள் சுதாரிக்கும்முன் நாங்கள் கவனித்துவிட்டோம்.

பேச்சரவம் கேட்டு எதையோ மறைக்கக் கையெடுத்து, நாங்கதான் என்ற அடையாளம் தட்டுப்பட்டதும், புத்தகத்தை மட்டும் சுருட்டி கையடக்கத்தில் வைத்துக்கொண்டு சத்தங்காட்டாமல் இருந்துகொண்டார்கள்.

சுடலையண்ணன் சொன்னான்: "செறுக்கிவுள்ளையோ என்ன செய்துனு பாத்தீகளால?"

"............................"

நாங்கள் என்ன சொல்வதென்று தெரியாமல் திருதிருவென்று முழித்தோம்.

"பிட்டுப் புக்கு படிக்கானுவள..."

புரிந்தும் புரியாமலும் சும்மா தலையாட்டி வைத்தோம்.

கண்மாய்க்குள் நுழைய கரை ஏறும்போது நான் கேட்டேன் அந்த விவரம்கெட்ட கேள்வியை. "அதுல அப்படி என்னண்ணே போட்டிருக்கும்?"

சிகரெட்டை எடுத்துப் பற்றவைக்கப் போனவர் என் கேள்வியைக் கேட்டதும் பற்றவைத்த தீக்குச்சியை சில நொடிகள் தாமதித்து, வாயில் இருந்த சிகரெட்டோடு சொல்லிச் சிரித்தார். "ஏல கள்ளன்.... உனக்குத் தெரியாதோல."

அப்படியான கதைகளை அண்ணன் எங்களுக்குச் சொல்ல அதுதான் துவக்கம்

களவை சாகசமென நம்பித் திரிந்த அண்ணன் சிகரெட் வாசனை கமழக் கமழ அவ்வளவு கதைகளை எங்களுக்குச் சொன்னார். அவர் சொல்லிய பல கதைகளை அவரே இன்று மறந்திருக்கக்கூடும். ஆனால், அவற்றையெல்லாம் துளிகூடச் சந்தேகிக்காமல் நம்பியதாலோ என்னவோ இன்றும் மறக்கவில்லை. நல்லது கெட்டது புரியாத வயதில்லையா... அதான் அண்ணனை ஒரு சாகச நாயகன் போல நம்பிக் கிடந்தோம்.

அவர் மற்றும் அவரின் இளவட்டக் கூட்டாளிகளின் களவுக் கதைகளின் கிளர்ச்சி அவரின் சொற்கள் மூலம் எங்கள் உடலில் பரவி சுருங்கிக் கிடந்த இடங்களில் ரத்தம் பாய்ச்சியது. ஒருநாளும் ஒருபோதும் நான் செய்யத் துணியாத செயல்களையெல்லாம் அப்போது கற்பனைகளில் கொண்டு நிறுத்தினார்.

நாங்கள் கண்மாயின் ஆள் நடமாட்டப்பகுதியைக் கடந்து கருவக் காட்டைச் சமீபிக்கும்பொது, காலையில் மேய்ச்சலுக்குப் போன கடைசி மந்தையும் ஊர் திரும்பிக் கொண்டிருக்கும். அந்தியின் இறுதி வெளிச்சத்தில் அல்லது இரவின் ஆரம்ப இருள் பரவலில், கழுத்திலிருக்கும் மேய்ச்சல் கம்பில் இரு முழங்கைகளையும் தொங்கவிட்டுக்கொண்டே எங்களை உற்றுப் பார்த்துவிட்டுக் கடப்பார் வெம்போடு மாமா.

அண்ணன் அனுபவித்தவர்களை அல்லது அனுபவிக்க நினைத்தவர்களை எல்லாம் கெட்டவார்த்தை வர்ணிப்புகள் மூலமும். கைகளாலேயே காற்றில் வரையும் ஓவியங்கள் மூலமாகவும் எங்கள் எதிரில் கொண்டுவந்து நிறுத்துவார். அவரின் இச்சையின் தகிப்பில் நாங்களும் கொஞ்சம் சூடேற்றிக் கொண்டோம்.

அவள்களின் முனஙகல்களையும் இறைஞ் சுதல்களையும் கதறல்களையும் அவர்களின் குரலிலேயே பேசியும் நடித்தும் காட்டுவார். நான் பார்த்த முதல் பலகுரல் கலைஞன் அவர். கதை சொல்லும்போதெல்லாம், கூட்டத்தின் மத்தியில் லெச்சையை விட்டு கச்சைகட்டியாடும் ஒரு நிகழ்த்துகலைக் கலைஞன் போலத் தெரிவார்.

'அப்போது' அவரின் பின்னந்தலையில் அழுத்திப் பற்றியதாகச் சொன்ன அந்த மருதாணி விரல்கள், என் தலையில் ஊர்வதாக பிரமையில் திளைத்ததுண்டு. தன்னின்பத் திளைப்புத் தருணங்களில் அவரின் கதைகளை மனனம் செய்த பாடங்களை மனதினுள் ஒப்பிப்பது மாதிரி உளறிக் கிடந்திருக்கிறேன். எல்லாம் முடிந்து நான் ஏன் இப்படியெல்லாம் சிந்திக்கிறேன், ஏன் இப்படித் தவறையெல்லாம் செய்கிறேன் என குற்றவுணர்ச்சியில் குறுகிப்போய்க் கிடந்திருக்கிறேன்.

ஏதோ சத்தியத்துக்குக் கட்டுப்பட்டதுபோல வெம்போடு மாமாவின் பின்னால் போகிறதே செம்மறி மந்தை, அதைப்போலத்தான் அவருடன் அவரின் மகுடி வார்த்தைகளில் மயங்கியபடியே 'ம்' கொட்டிக்கொண்டே போவோம். ஒரு ஞானியிடம் தத்துவ விளக்கம் கேட்கும் பக்தர்களைப் போல அந்தக் கதைகளைக் கேட்டோம்

நாங்கள் மூவரும் அந்த அரையிருட்டில் எங்களுக்குள் முகம் பார்த்துக்கொள்வதுகூடக் கிடையாது. மூவருமே அவரின் முகத்தை மட்டும் இடையிடையே பார்த்துக்கொள்வதுண்டு.

அவரிடம் கதைகளைக் கேட்ட நாட்களில் எல்லாம் உடல் காய்ச்சல் கண்டதுபோல அனலாய்க் கொதிக்கும்.

இரண்டாம்நாள் திருவிழா கரகாட்டத்தில் பார்த்து, பாதியும் முக்காலுமாய்ப் புரிந்துவைத்திருந்த அல்லது புரியாமல் மனதினுள் மண்டிக் கிடந்த



சொற்களுக்கெல்லாம், செயல்களுக்கெல்லாம் ஈரம் சொட்டச்சொட்ட எங்களுக்கு அருஞ்சொற்பொருள் சொன்னவர் அண்ணன்தான்.

அவர் ஊருக்குச் சென்றபிறகும் கூட சில நாட்களுக்கு அந்தக் கதைகள் என் தனிமையைத் துரத்தும். இதோ இப்போதும்கூட மூளை மடிப்புகளில் சாகாமல் நெளிந்து கொண்டிருக்கின்றன.

எப்பவும் பரமா பழகும் அழகு மதினியின் அண்மையை எதிர்கொள்ளக் கூடத் தயங்க ஆரம்பித்தேன். பெண்களைப் பற்றி அண்ணன் புகுத்திய தவறான கற்பிதங்களையெல்லாம் விட்டு வெளியேற பின்னாட்களில் நிறையக் கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது.

2003 வருசப் பிறப்பு. அன்னைக்கு காலையில் எழுந்ததும், ஹேப்பி நியூ இயர் சொல்ல வழக்கம்போல முப்புடாதி வீட்டுக்குப் போனேன். ”நேத்து நைட்டு எங்க பெரியப்பா வீட்டுக்கு போன் வந்துச்சுல... என்னனு தெரியல... உடனே அண்ணன் நைட்டே ஊருக்குக் கிளம்பி போயிட்டாம்ல” என்று சொன்னான் முப்புடாதி.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு, கருப்பசாமி கோயில் திருவிழாவுக்கு அண்ணன் வந்திருந்தார். அண்ணனுக்கு கல்யாணம் முடிந்திருந்தது. ஈஸ்வரி மதினி அண்ணனுக்கு அவ்வளவு பொருத்தமாக இல்லை. சின்னப் பிள்ளையாகத் தெரிந்தது. “ஊதா பாவாடை சட்டை, வெள்ளைத் தாவணி போட்டால் நம்ம கூடப் படிக்குற பிள்ள மாதிரித்தான் இருப்பாகபோல... இன்னல” என்றான் பேச்சிமுத்து.

அண்ணனின் ரசனை என்ன என்பதை அவரின் கதைகள் வழியே நன்கு புரிந்து வைத்திருந்தேன். அப்போது `தமிழ் சினிமாவில் எங்களுக்குப் பிடித்திருந்த சிம்ரன், ஜோதிகா, திரிஷா இவர்களையே அழகு என ஒத்துக்கொள்ளாதவர் அவர். ஈஸ்வரி மதினியை அவரின் மனைவியாகப் பார்த்ததும் எனக்கு ஆச்சி அடிக்கடி சொல்லும் சொலவடை நினைவுக்கு வந்து போனது.

ஈஸ்வரி மதினி அண்ணனிடம் பயபக்தியோடு நடந்துகொண்டாள். பேசக்கூடப் பயந்தாள். அண்ணனின் மீது பாசமாக இருந்தாள். மதினி “எத்தான்...” என்று கூப்பிடும்போதெல்லாம் விருந்துக்கு வந்த இடம் என்றும் பாராமல், நாலு மாதக் கர்ப்பிணி என்றும் பாராமல் எரிந்து விழுந்தார். மதினி என்ன கேட்டாலும், என்ன சொன்னாலும் கெட்ட வார்த்தை சொல்லித் திட்டினார். எந்த எதிர்வினையும் காட்டாத மதினியைப் பார்க்கவே பாவமாக இருந்தது.

மூணாம் திருவிழான்னைக்கு சாமி கும்பிட போகும்போதுகூட எங்களுடனேயே இருந்தார். நடுஇரவில் சக்தி நிறுத்தும் நேரம், “இருங்கல... வந்திருதேன்” என்று சொல்லிவிட்டுப் போனவர் சாராயம் குடித்துவிட்டு லேசான போதையுடன் வந்தார். கரையேறி கம்மாய்க்குப் போனோம். கல்யாணக் கதைகளைப் புலம்புவார் என்று நினைத்திருந்தோம். நான்கு சிகரெட் ஊதித்தள்ளினாரே ஒழிய, ஒன்றும் பேசவில்லை.

அந்தத் திருவிழாவுக்குப் பிறகு அண்ணனை நான் சந்திக்கவே இல்லை. மேல்படிப்பு, வேலை, திருமணம், குழந்தைகள் என வாழ்க்கையின் வேகவேகமான ஓட்டத்தில் அண்ணனை நினைப்பதே அருகிவிட்டது.

இன்று காலை பேச்சிமுத்து அழைத்திருந்தான். அவன்தான் தகவல் சொன்னான். பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு அண்ணனைப் பற்றிப் பேசிக்கொண்டோம். இன்று பேச்சி அழைத்திருக்கவே வேண்டாமே என்று தோன்றியது. அண்ணனுக்கு இந்த முடிவு ஏற்பட்டிருக்க வேண்டாமே என்று தோன்றியது.

பேச்சி வாட்ஸ் அப்பில் அனுப்பியிருந்த சுட்டியைத் தொட்டேன். ‘நெல்லையில் பரபரப்பு கூடா நட்பால் விளைந்த விபரீதம்’ என்ற முகப்புப் படம் காட்டியது. பிரபல செய்தி சேனலின் வலைதளத்தில் சித்தரிக்கப்பட்ட காட்சிகளுடன் விலாவாரியாக காணொளி ஓடத் துவங்கியது. ‘கூடா நட்பைக்கண்டித்ததால் மனைவி வெறிச்செயல். காதல் நண்பருடன் சேர்ந்து, கட்டிய கணவரைத் தீர்த்துக் கட்டிய மனைவி’ இப்படியான மொழிநடையில், போலியான கம்பீர பின்னணிக் குரல் நேரில் இருந்து பார்த்ததைப் போல இன்னும் என்னென்னவோ சொல்லிக் கொண்டிருந்தது.

காதல் நண்பர் என்று காட்டப்பட்ட இளைஞனின் புகைப்படத்தை உற்றுப் பார்த்தேன். 25 வயதில் சொடலை அண்ணனும் இப்படித்தான் இருந்தான். அதே சாயல். ●

**செவல்குளம் செல்வராசு**
<sevalkulamselvarasu@gmail.com>

# முயங்கொலிக் குறிப்புகள்

**ஓவியம்: நடேஷ்**





36.

பொன் சங்கின் உள்ளுறையும்
ஓங்காரத்தின் மௌன நதியென
உன்னிடம் பேசத் தயங்குகிறேன்.

மின்னல் சுடர்ந்த கள்ளூறிய
தாமரைப் பூவின் ரகசியக் குறிப்பாய்ப்
பார்த்தபடி இருக்கிறாய்.

நாடோடிப் பாடலொன்றின் தாளத்திற்
கரையும் ஆன்மாவை ஏந்தியபடி
பொருளறியாமல் தடுமாறுகிறேன்.

கிளிஞ்சலுள் உறைகிற
மழையொத்த என் காதலைக்
கடற் பறவையின் கவனத்துடன்
ருசிக்கிறாய்.

இரை நோக்கி நகரும் புறாவின்
தயக்கத்துடன் கல் மண்டபத்திலென்
நேச விண்ணப்பத்தை வைக்கிறேன்.

பூமி உடலெங்கும் ஆரவாரத்துடன்
அணைத்துச் சிரிக்கும் பெருமழைப்
பூரிப்புடன் ஏற்கிறாய்.

மொழி சுவைக்கும் வண்ணத்துப்
பூச்சிகளாய்
இக்கவிதையில் அமர்ந்து
நாமிருவரும் முத்தமிடுகிறோம்
ஊரறிய.

தொடரும்

**கயல்**
<dr.kayalvizhi2020@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.**

**Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

